1913

# சர்வ சமய சமரசக்

# கீர்த்தனைகள்

உ

கடவுள் துணை.



# சர்வசமயசமரசக் கீர்த்தனைகள்.

இவை,

மாயூரம்முன்சீப்

ச. வேதநாயகம்பிள்ளை அவர்களால்

இயற்றப்பட்டு,



கே. பெ. சிங்காரவேலு முதலியாரால்

சென்னை:

வித்வசிரோமணிவிலாசஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1913.

நெ. 28. சுப்பிரமணியமுதலிதெரு, சௌகார்பேட்டை, மதறாஸ்.

சர்வசமயசமரசக்கீர்த்தனைகளின்

# பலபிரிவுகள்.

| விடயம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
|---|---|
| தேவதோத்திரக்கீர்த்தனைகள் | 1-முதல் 138-வரையில் |
| ஈசுவருடபஞ்சத்தைப்பற்றி | 139 |
| *இதோபதேசக்கீர்த்தனைகள் | 140முதல்-161-வரையில் |
| உத்தியோகசம்பந்தக்கீர்த்தனைகள் | 162-முதல்-175-வரையில் |
| குடும்பசம்பந்தக்கீர்த்தனைகள் | 176-முதல்-192-வரையில் |

## ஹிதோபதேசக்கீர்த்தனைகளின் விபரம்.

| விபரம். | கீர்த்தனை இலக்கம். |
|---|---|
| கடவுளைத்தியானிக்கும்படிவற்புறுத்தல் | 140-141-142 |
| துர்க்குணங்களைவெளியிடல் | 143 |
| மனமயக்கந்தவிர்த்தல் | 144 |
| நற்புத்திகூறல் | 145 |
| நித்தியானந்தந்தேடல் | 146 |
| கள்ளஞானம் | 147 |
| பொருளாசையொழித்தல் | 148 |
| செல்வச்செருக்கு | 149 |
| உலகவாழ்வைவெறுத்தல் | 150 |
| உடலைவெறுத்தல் | 151 |
| பணதூஷணை | 152 |
| பரஸ்திரீகமனம்விலக்கல் | 153-154-155 |
| உய்யும்வழி | 156 |
| நெஞ்சொடுபிணங்கல் | 157 |
| துர்க்குணம்போன்ற நற்குணங்கள் | 158 |
| மனவஞ்சகத்தைப்பற்றி | 159 |
| மனமயக்கம் | 160 |
| காலதூஷணை | 161 |

## உத்தியோகசம்பந்தக் கீர்த்தனைகளின் விபரம்.

| விபரம். | கீர்த்தனை இலக்கம். |
|---|---|
| நியாயபரிபாலனஞ்செய்யவரம்வேண்டல் | 162 |
| துர்வழக்காளிகளைப்பற்றி | 163 |
| உத்தியோகசங்கடம் | 164-165 |
| பெரியதுரையாகியகடவுளுக்கும் மனுஷத்துரைகளுக்குமுள்ளபேதம் (பற்றி | 166 |
| கோள்சொல்லும் உத்தியோகஸ்தகளைப் | 167 |
| சாமியைநினைக்கநேரமில்லையென்றுமுறை | 168 |
| உத்தியோகத்தை வெறுத்தல் | 169 |
| துன்பத்துக்குஅஞ்சாமை | 170 |
| பிறர்மேற்குறைகூறாமை | 171 |
| பரிதானகண்டனம் | 172-173-174 |
| பிரபுத்துவதூஷணை | 175 |

## குடும்பசம்பந்தக்கீர்த்தனைகளின் விபரம்.

| விபரம். | கீர்த்தனைகள் இலக்கம். |
|---|---|
| தாய்தந்தையரைநமஸ்கரித்தல் | 176 |
| தகப்பன்மகனுக்குப்புத்திகூறல் | 177 |
| தகப்பன்மகளுக்குப்புத்திகூறல் | 178 |
| உத்தமஸ்திரீயின்லக்ஷணம் | 179 |
| பெண்பார்க்கத்தூதனுப்புதல் | 180 |
| தூதன்பெண்பார்த்துவந்துசொல்லல் | 181 |
| தலைவியிடத்து வைக்கவேண்டியநேசத்தைப் பற்றித் தலைவன்கூறுதல் | 182 |
| தலைவனுடையமேன்மையைத் தலைவிதோழிக்குக்கூறுதல் | 183 |
| துன்பஞ்செய்தாலுந் தலைவனேகதியென்று தலைவிதோழிக்குச் சொல்லுவது | 184 |
| தலைவன்செய்தநன்மையைத் தலைவிகூறல் | 185 |
| மாமி நாத்தி முதலானவர்களின் கொடுமையைப்பற்றி ஒருஸ்திரீமுறையிடுதல் | 186 |
| கணவனைப்பகைத்த ஸ்திரீயை அவள்தாய் கண்டித்தல் | 187 |
| தங்களுக்குப்படிப்பிக்கும்படி ஸ்திரீகள்புருஷர்களைவேண்டல் | 188-189 |
| மூடவிவாகஞ்செய்யாதபடிஒருஸ்திரியைத்தடுத்தல் | 190 |
| மைத்துனர் கலியாணத்திற்பாடிய பரியாசக்கீர்த்தனை | 191 |
| மைத்துனருக்குப் புத்திபோதித்தல் | 192 |

## சர்வசமயசமரசக்கீர்த்தனைகளிலுள்ள இராகங்களின் அகராதி.

உ.

கடவுள் துணை.

# சர்வசமயசமரசக்கீர்த்தனைகள்.

## 1. இராகம்-தேவகாந்தாரி-ஆதிதாளம்.

### பல்லவி.

எக்காலமும்உந்தன் பொற்கால்பணிந்துகொண
டிருக்கவரம் அருள்வாய். எக்கா

### அநுபல்லவி.

தக்கோர்அபிமான ஞானசீலா
சகலபுவனரக்ஷ காநுகூலா. எக்கா

### சரணங்கள்.

1 கந்தமேவுபிர பந்தமாலைபாடி
கந்தமார்உன் அர விந்தபாதம்சூடி
வந்தனுதிகள் அனந்தமேசொலி
விழுந்துபூமியில் எழுந்துநைந்துருகி. எக்கா

2 துங்கசாதுஜன சங்கமோடுகூடி
பொங்கும்ஞான அகளங்கவாரிஆடி
அங்கமேபரவ சங்கொளப்பல
தங்களோடுசுப மங்களங்கள்சொல்லி. எக்கா

3 பழுதிலாது தினம் முழுதும்உன்னைநாடி
தொழுதுநேசமுடன் அழுதுபாடியாடி
ஒழுகுசெந்தழலின் மெழுகுபோலமனம்
இளகியேஅதிக புளகிலாங்கமுடன். எக்கா

4 பூதலம்பரவு பாதவேதநாதா
சாதகம்செயும் அதேதநீததாதா
போதநாயகனே பூதநாயகனே
நீதநாயகனே வேதநாயகனே. எக்கா

2. இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்.

பல்லவி.

ஓடிநானுனைத் தேடிவந்தேனே-எனக்
குதவிசெய்தருள் ஐயனே.

அநுபல்லவி.

நாடிஉன்பதம் தொட்டேன்
கோடிதரம் கும்பிட்டேன்
நாதவிநோதபிரசாதபிரபோத
அபேதஅதீதநிர்வாதகியாதனே.

சரணங்கள்.

1 அற்பமானபதார்த்தம்-சற்றும்விரும்பேன்
ஐயாயிது யதார்த்தம்
அற்புதபரமார்த்தம் கொடுத்தருளில்
அதுவே உபயோகார்த்தம்
பற்பல விசித்திரனே
கற்பனு சமுத்திரனே
பாச விநாச சுரேச நரேச
பிரகாச விகாச உலாச விலாசனே.

2 வந்துனையே அடுத்தேன்-கீர்த்தனமாலை
வகைவகைநான் தொடுத்தேன்
வந்தனம்கையெடுத்தேன்-நீவசிக்கஎன்
மனக்கோயிலுங்கொடுத்தேன்
அந்தமனே உனக்கே
உந்தன்மனே எனக்கே
ஆயவிதேயர்கள் நேயசகாய
அகாய உபாய நியாயவி தாயனே.

3 அன்பர்உபாசனே-பூதலந்தன்னில்
அதர்மவிமோசனே
இன்பநிவேசனனே-வேதநாயகன்
இதயசிம்மாசனே
என்பவங்களைத் தீர்ப்பாய்
உன்பதந்தன்னிற் சேர்ப்பாய்
ஏக அநேக திரிலோக நிர்வாக
தெய்வீக விவேக அசோக இபாகனே.

### 3. இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

எனை ஆதரிப்பாயே-என்மனஇருள்
தனையேபிரிப்பாயே. எனை

அநுபல்லவி.

வினையே அரிக்கும்செல்லா
வீணனான் ஒருபுல்லா
நினையா என்மனம்கல்லா
நிதம் அதனுடன்மல்லா
நிச்சயப் பிரபோதனே
அக்ஷயப் பிரக்கியாதனே
சஜ்ஜனப் பிரமாதனே
துர்ஜ்ஜனப் பிரமாதனே. எனை

சரணங்கள்

1 துக்கபிரபஞ்சத்தொல்லை
சொல்வதற்குண்டோ எல்லை
திக்குவேறெனக்கில்லை
தெய்வமேகேள் என்சொல்லை
சிஷ்டர் சமுதாயனே
துஷ்டர்கள் அபாயனே
இஷ்டர்கள் சகாயனே
அஷ்டகுணநேயனே. எனை

2 அடியனான் வினைவசம்
ஆயினன் இதுநிசம்
படியிற்கருணைரசம்
பாலித்தருள் கவசம்
பக்தஜன நேசனே
சுத்தமண வாசனே
சித்தமல நாசனே
வித்தக விருகனே, எனை

3 மருவிய பாசவலை
மாட்டி உற்றேன்கவலை
கருமசைதன்னியமிலை
தந்தென் மயக்கந்தொலை

போதகப்பிரகாசனே
புண்ணியப் பிரதேசனே
சாதகக்கிரு பேசனே
தாசருட் பிரவேசனே. சித்தம்

5. இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி

உன்னிடத்திற்சொல்லாமல் யாரிடத்திற்சொல்லுவேன்
ஓ-ஓ-ஜகதீசா.

அநுபல்லவி.

பொன்னிடத்தாசையறு புனிதர்கள்தமக்கின்பம்
பொழிதருவேஇந்தப் புவியில்நான்படுந்துன்பம் உன்

சரணங்கள்.

1 வயிறுபசிக்கும்பிள்ளை மாதாயிடம்போமன்றி
மற்றொருவரிடத்திற்சேருமோ-நானும்
அயர்வுறும்பெரும்பிணி அருமருந்தாலன்றி
அயலொன்றினாலே அதுதீருமோ-கன
வெயிலால் வருந்துவோரே
வேண்டுவர் நிழல்நீரே
உயிர்ப்பயிரோம்புங்காரே
உனையன்றிக் கதியாரே
உலைவுறுசல்லடை போற்பலஓட்டை
உளதாகியவெறும் புழுமலக்கூட்டை
நிலையெனமனக்கவி செய்யும்பலசேட்டை
நித்தியம்நான் அதனாற்படும்பாட்டை உன்

2 நாதனேநான்பிழை யாதுசெய்யினும்நின்னை
நம்பினேனென்மேலின்னம் க்ஷாத்ரமா-பாரிம்
ஒதருமபுலச்சத்து ராதியர்கையிலென்னை
ஒப்புவிக்குதலதர்ம சாஸ்திரமா-மறு
மாதர்மேல்செல்லும் நேத்திரம்
வாயே அபத்தபாத்திரம்
திதாரைசொல்லுஞ் சுரோத்திரம்
சிற்றின்பம் வேண்டுங்காத்திரம்

தீயஅவயங்கள் செயுந்தினமோசம்
சிந்தையிற்குடிகொண்ட தாசாபாசம்
நாயேன்சொல் கைகளே ஆபாசம்
நான்பக்கத்திலும் நான்படுங்கிலேசம். உன்

5 எத்தனைசுமைபாவம் வேண்டுமோனுமுந்தி
எனக்குக்கொடுக்கலாம் அச்சாரமே-எந்தன்
அத்தனேநானுன்சேயென்றறிந்தும் நோய்செய்யுமாயைக்
கார்தந்தார்இந்த அதிகாரமே-சர்வ

உத்தமஞ்சேர் நிர்தோஷ
உன்னதமா விசேஷ
பத்தர்நித்திய சந்தோஷ
பரசமயத்து வேஷ

பாக்கியமலர்ந்தருள் பழுக்கும்உத்தியான
பலபுவனத்மகோ டிகள் அபிமான
ஆக்கியவேத நாயகன்ஸ்வாதீன
அன்னைதந்தைகுருதெய்வஞ் சகலமுமான உன்

---

## 6. இராகம்-பூரணகௌளை-ஏகதாளம்.

பல்லவி.

என்பிழைகள் பொருத்தருள்வாய்-எனை அலைக்கும்
துன்பவினை அறுத்தருள்வாய்

அநுபல்லவி.

முன்பரவியே ஜெபிக்கும்
அன்பர்கள் அனுபவிக்கும்
இன்பமே அவர்விரும்பும்
நின்பதகமலம் நம்பும். என்

சரணங்கள்.

1 நேயனைப்போல்விவகரிப்பேன் துதிகவிகள்
ஆயிரம்உண்டாக்கிவிரிப்பேன் என்செய்கையெல்லாம்
வாயின் அன்பலாதுமனந் தோயும்அன்புளதோசிறு
நாயின்அன்புமேயிலாமல் நிர்பயம்பணிகிறேம் என்

2 எண்ணவொண்ணுமோஎன்பவமே-ஐயனே இந்த
மண்ணினில்என்ஜன்மம்அவமே-தினந்தினமும்
உண்ணலும்நித்திரைதனை-நண்ணலும்பெரும்பவங்கள்
பண்ணலுமல்லாதுன்பதம்-எண்ணல்செய்தறியேன்சுவாமி

3. போதகம்என்னிடம்லயமோ-என்மனம்பஞ்ச
பாதகங்கட்காலயமோ-புவனமிசை
மாதவம்புரிபவர்க்குக்--கோதகலும்இகபர
சாதகங்கொடுத்தருளும்-வேதநாயகா இரங்கி. எண்

7. இராகம்-சுப்பிரதீபம்-திரிபுடை.

பல்லவி.

வினையே எனையே மேவாதருடே

அநுபல்லவி,

நினையேநம்பினே னின்மலப்பொருளே வினை

சரணங்கள்.

1 கனவிலுந்தருமத்தைக் கண்டறியேனே
அனவரதமும் உனதருள்குறியேனே. வினை

2 பாவமென்பதற் வொருபதியானேனே
ஜீவனும்வழி தெரியாமற்போனேனே; வினை

3 உதரபோஷணையன்றி உனைநினையேனே
இதயந்தனில்உன்னடி இணைபுனையேனே வினை

4 பூதலந்தொழும்அதி புண்ணியாமித்திரனே
வேதநாயகன்தொழும் விமலபத்திரனே வினை

---

8. இராகம்-பரசு-ரூபகம்.

பல்லவி.

ஆண்டருளே-கருணை-பூண்டருளே

அநுபல்லவி.

நூண்டருஞ்சுட ராகவிளங்கிடும்
சோதியே உயர் நீதியேஎனை ஆண்

9 இராகம்-மோஹனம்-திரிபுடை-தாளம்.

பல்லவி.

காக்ஷிஎனக்குக்கொடாமலிருக்கின்ற
காரணம் ஏதையா

அநுபல்லவி.

சாக்ஷியாய்நிற்கும் சருவாதிகாரனே
மாக்ஷியுடையோர்மகிழ் நிர்விகாரனே

சரணங்கள்

1 அந்தரங்கபக்தி அற்றவனென்றோ
அக்கிரமத்தில்பெயர் பெற்றவனென்றோ
பந்தப்பேய்க்குள்ளத்தை விற்றவனென்றோ
பாதகங்களெல்லாங் கற்றவனென்றோ

2 மறந்தும்ஒருமெய் சொல்லாதவனென்றோ
மருந்துக்கும்நன்மை இல் லாதவனென்றோ
சிறந்தமெய்ஞ்ஞானங்கல் லாதவனென்றோ
தேசத்தார்க்கெல்லாம்பொல் லாதவனென்றோ

3 ஏசிமறையை இகழ்ந்தவனென்றோ
ஈனமதத்தைப் புகழ்ந்தவனென்றோ
நீசெய்தநன்றி மறந்தவனென்றோ
நீசர்க்குள்மெத்தச் சிறந்தவனென்றோ

4 ஆதிமத்தியாந்த ரஹிதமகேசா
அற்புதசின்மயா னந்தவிலாசா
வேதவேதாந்த விதிஉபதேசா
வேதநாயகன் இதயப்பிரகாசா.

---

10. இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

அருள்புரிவாயே எனதுள
மருள்தெரிவாயே

அநுபல்லவி.

இருளைநிகரும் சுருள்கொள்ஓதியா
இலகும்பொருள்-உலகம்புரி-கலகம்பட-விலகும்படி. அரு

சரணங்கள்,

1 நினைவெல்லாம் உன்னினைவதாயென் னெஞ்சமுன்னுமோ-பழி
புனையும்வாய்வெறும்பேச்சைவிட்டுனைப்புகழ்ந்துபன்னுமோ-திரு
தினையளவு மெய்ந்நினைவிடாது
சிந்தித்துனை-வந்தித்திடு-புந்தித்திடப்-வந்துற்றிட

2 எத்திசையும்உன்னுருவமாகவே இலகக்காணேனோ-சொந்த
அத்தம்யாவும்நீயென்றேமிக ஆசைபூணேனோ-கன
பத்தியாயுனை நித்தம்போற்றிப்
பாடித்தினம்-காடித்தவம்-நீடிக்கதி-கூடிக்கொள அரு

3 நீசமாயரும் போதமாயெங்கும் நிறையுங்கர்த்தாவே-நாளும்
வேதநாயகன் காதல்மனைப்பெண் மேவுப்பர்த்தாவே-கொண்ட
ஏதமறப்பிர சாதம்உதவி
இழிவண்டிய-பழியின்றுறவ-வழிகொண்டுனை விழிகண்டிட

---

## 11. இராகம்-மணிரங்கு-திரிபுடைதாளம்.

பல்லவி.

சித்தம்இரங்கிநல் முத்தர்தங்கோஷ்டியிற்
சேர்த்தெனைக்காத்தருளே

அநுபல்லவி.

உத்தமசிலர்தஞ் சித்தமலர்உறை
வேனே-கோனே-வானே-தேனே

சரணங்கள்.

நின்னடித்தொண்டருக் கென்னை அறியும்
நிதம் உலகந்தானே
என்னஉன்தொண்டின் பலனென்றெனைப்புவி
ஏசில்என்சொல்வேனே
பன்னரும்உன்னருள் என்னருகாகிடப்
பண்ணோ-கண்ணே-எண்ணே-விண்ணே சித்

2 பொய்த்தெய்வந்தங்களைப் போற்றிப்பெரும்பழி
பூண்டவர்கட்குமனமே
மெய்த்தெய்வம்உன்னைத் தொழும்எனக்கென்ன
விசேஷப்பிரயோசனமே
கைத்தொழில்அண்டம் அனைத்தையுந்தாங்கு
கையா-துய்யா-மெய்யா-ஐயா சித்

கழுவக்கழுவ அழுக்குடல்மீது
கலந்தடருந்தன்மையே
தழுவிஎன்னெஞ்சுறு மாசுகள்நீங்கிடத்
தந்தருள்வாய் நன்மையே
எழுமன்பொடுவேத நாயகன்போற்றிடும்
ஏகா-யோகா-வாகா-தியாகா சித்த

12. இராகம்-தர்பார்-திரிபுடைதாளம்.

பல்லவி.

என்னை ஆளையா என்விண்ணப்பம்
தன்னைக்கேளையா

அநுபல்லவி,

மின்னெனிகரும்வாழ்வை வெறுப்பவர்குரியோனே
அன்னபிதாசற்குரு வாகியபெரியோனே என்

சரணங்கள்.

அடியன்மேற்சினமா என்குறைநீக்கி
ஆள்வது கனமா
கடினம்நின்மனமா எனதுநெஞ்சங்
கவலைக்காசனமா
படியில்என்னகத்துறு பாவஇருளைமாற்றி
திடமுறவேமெய்ஞ்ஞான தீபமதனையேற்றி என்

என்றுஞ்சஞ்சலமா ஐயனேமாயைக்
கிவ்வளவுபலமா
வென்றுகொள்ளலமா அதனால்ஏழை
மெலிவதுநலமா
நன்றருவாகியநாதா என்முகம்நோக்கி
குன்றெனநான்செயுங் கொடுவினைகளைப்போக்கி என்

கைவிடலாமா என்னிடம்வரக்
கால்மலர்நோமா
நைவினைபோமா இனிமைதங்கும்
நன்னயநாமா
தெய்வனுபகனுகித் திகழுறும்அகளங்கா
கைவல்யஞானநெறி கமழ்மதுரப்பிரசங்கா என்

4 திக்திக்குக்கேனே அமுதேகண
தேவர்கள்கோனே
எத்திக்குந்தானே எள்ளுமெண்ணெய்போல்
இருக்குங்கோமானே
புத்தியுடையோர்சூட்டும் புகழ்மாலை அணிவோனே
பத்தியுடனேவேத நாயகன்பணிவோனே எண்

---

## 13. இராகம்-கல்யாணி-ரூபகதாளம்.

### பல்லவி.

தருணங்கருணைபுரிகுவாய் ஐயா-உனக்கனந்தங்கோடி
சரணஞ்சரணந் தெரிகுவாய்

### அநுபல்லவி.

அருணகோடி தேஜோமயனே பொன்
திரணமென்றுன்னுவோர்பயனே-இத் தரு

### சரணங்கள்.

1 இந்திரியச்சத்துருக்கள் செய்மோசம்
என்னசெய்வேனிர்வகித்தல் பிரயாசம்
நிந்தனையானஅநு பந்தபாசம்
நீங்கச்செய்வாய்புண்ணிய உபதேசம்

நீயேகதியன்றோ ஒரு
தாயேதுயர்ஒன்றோ சிறு
நாயேன்கெடல்நன்றோ கன
தீயேன்உடல்குன்றோ இது தரு

2 கோரமாய்த்தன் பிள்ளைசெய்யினுங்-தீது
கோபித்துநீக்கிடுந் தாயுண்டோஓது
காரமாநான்செயும்பாவம்பொறுது
கைவிடில்வேறெனக்காதாரமேது

காயத்தைஎடுத்தேன் அரு
மாயத்தைஅடுத்தேன் அறி
யாயத்தைஉடுத்தேன் திரு
நேயத்தைவிடுத்தேன் இது தரு

3 நச்சுமரத்தையும் வைத்தவன்தானே
நாள்தோறுங்காவல்செய் யாமல்இரானே
இச்சகமீதில்என்னை அமைத்தோனே
என்னைநீஆளா விடிற்பிழையேனே

ஏகந்தழைஉருவே சுக
போகந்தழைதருவே கண
யோகந்தழைதிருவே முதிர்
பாகந்தழைகுருவே இது தரு

4 நிதமும்நானுதும் பாதகச்சேறு
நீக்கிடப்போதுமோ நின்னருள்ஆறு
விதியுங்கதியும் இல்லையேவேறு
வேதநாயகனே அருள்பேறு
வேதத்துருவோனே பல
பூதம்பெருமானே கன
போதத்தமர்கோனே இது
பாதத்தைவிடேனே இது தரு

---

14. இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்

பல்லவி

ஐயாஎனையாண்டருளே-உனை
அண்டினனே மனம்-வேண்டினனே ஐயா

அநுபல்லவி.

பொய்யாம்வாழ்வினில் நான்குழையாமல்
போகாதிகளில்என் மனம்நுழையாமல் ஐயா

சரணங்கள்.

1 ஒருநிமிஷமுமுனதடி மறவாமல்
உலகழியினுமுனதருள்துறவாமல்
இருதயமதனிலோரிடர்பிறவாமல
இழிவுறுபழியோடு நானிறவாமல் ஐயா

2 உன்னையலாதொரு வரையுந்தொழாமல்
உதரநிமித்தம்எங்கும் ஓடியழாமல்
இந்நிலமீதுதூராசையெழாமல்
இறந்தபின்னெனெரிநரகில்விழாமல் ஐயா

3 நல்லவழிதனைஎந்த நாளும்விடாமல்
நாட்டில்அகடனென நான்பேரெடாமல்
பல்வகையாகிய பழிகள்தொடாமல்
பாவையர்மோகத்தில் படிந்துகெடாமல் ஐயா

4 என்னுயிர்போல எவ்வுயிரையும்பேண
இகசுகபோகத்தை யான்றுமோண
மின்னும்குணபர னந்தனைப்பூண
வேதநாயகனே நானுனைக்காண — ஐய

---

15. இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய்-ஸ்வாமி-இந்த

அநுபல்லவி.

பந்தவினைவயலாம் அறவேண்டும்-உன்
பாததரிசனம் பெறவேண்டும் — இந்த

சரணங்கள்.

1 தினமும்உன்பதமலர் தொழவேண்டும்-நான்
தேகபரவசமாயெழவேண்டும்
அனல்மெழுகாயுருகி யழவேண்டும்-இனி
ஆனந்தக்கடலில்நான் விழவேண்டும் — இந்த

2 தேகவிஷயாதிகள் கெடவேண்டும்-ஞான
தீபத்தைஎன்னுளத்தில் இடவேண்டும்
பாகஅறப்பயிரை நடவேண்டும்-அந்தப்
பயிர்க்குள்அருட்புலனை விடவேண்டும் — இந்த

3 மோகப்பசாசுதனை வெலவேண்டும்-நல்ல
முத்திநெறியிலே செலவேண்டும்
நாகமெனும்புலனைக் கொலவேண்டும்
நாயனேயுன்றைமந் சொலவேண்டும் — இந்த

---

16 இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தப்பிழைகளெல்லாம் பொறுப்பாயே-பாச
பந்தக்கணைகளைவேரறுப்பாயே — இந்த

அநுபல்லவி.

சொந்தப்பிள்ளைகளான தூயவர்க்குப்பிதாவே
அந்தப்பாமசுகம் அளிக்குங்கனதாதாவே — இந்த

சரணங்கள்.

1 ஆதியானபரஞ்சோதி உன்னைநான்வெறுத்தேன்
என்மனந்தன்னை
ஆகமாதிகள்சொல் யோகசாதனையில்நிறுத்தேன்
அனுதினமும்
வேதம்வேதியர்கள் ஓதுநீதியுமறுத்தேன்
சமர்த்தன்போல
வீம்புபேசிப்பெரும்பாம்புபோல விடம்பொருநதேன்
சதாகாலமும்
பூதலவாழ்வுதனைநாடினேன்-மறு
மாதர்கள் சுகந்தனைத்தேடினேன்-பஞ்ச
பாதகரோடும்உறவாடினேன்-கன
காதகனென்றுபெயர்சூடினேன்
ஆதுலர்க்குமுதீயாமலேதடுத்தேன்
சாதுசனங்களைக்கண்டேதடியெடுத்தேன் இந்த

2 நேயமானதந்தைதாயைசற்குருவைப்பழித்தேன்
ஜெபதபத்தை
நித்தியகர்மங்களைப்பத்திமார்க்கங்களையழித்தேன்
கைப்பொருளெல்லாம்
காயமோகசுகமாயவாழ்வினிற்செலவழித்தேன்
உனைத்தொழாமல்
காட்டில்வாழ்மிருககூட்டம்போலநாள்கழித்தேன்
அநுதினமும்
தூயரைக்குறைசொல்லித்தூற்றினேன்-பெரும்
தீயரைத்தினந்தினம்போற்றினேன்-நல்ல
ஞாயவழக்குகளை மாற்றினேன்-பது
னாயிரம்பொய்சொல்லித்தேற்றினேன்
வாயில்வந்தபடிவம்புகள்தொடுத்தேன்
கோயில்மணியமெனக்குக்குடிகளைக்கெடுத்தேன் இந்த

3 பூவிலேபெரியபாவியென்றுபெரெடுத்தேன்
புரட்டுருட்டும்
பொய்யும்வஞ்சனையும்செய்யும்மார்க்கந்தனையடுத்தேன்
உண்மைதனை
நாவிலேஎனதுபாவிலே சொலாமல்விடுத்தேன்
ஞானியைப்போல
நாட்டில்மாயவேஷங்காட்டிஎன்னைநான்கெடுத்தேன்
அநுதினமும்

பாவமும்பழிகளுந்தாங்கினேன்-பெருங்
கோவமுங்குரோதமும்தூங்கினேன்-புண்ணிய
ஜீவனஞ்செய்யாமலே தூங்கினேன்-நல்ல
பாவனஞ்செய்யும்வழிநீங்கினேன்
ஆவலாகப்பிறர்பொருள் அபகரித்தேன்
காவலாசெரியைக்கடந்துசஞ்சரித்தேன் இந்த

4 வாரங்கூலிகளிற்சோரஞ்செய்துநான்குறைத்தேன்
பிறரிடத்தில்
வாங்கியபொருள்களைநாங்கிலையென் றுநான்மறைத்தேன்
பஞ்சத்திலேவியா
பாரஞ்செய்யப்பலசேரில்நெல்லைக்கட்டிநிறைத்தேன்
நல்லதன்னணீரைப்
பாழிலேசகலநாழிகையும்விழலுக்கிறைத்தேன்
முதலினெடு
நேரவட்டிதனைக்கூட்டினேன்-வெகு
தூரம்அகவிலையைக்கூட்டினேன்-வழக்
கோரஞ்சொல்லிச்சண்டைமூட்டினேன்-உப
காரஞ்செய்தோர்க்குக்கத்திதீட்டினேன்
தாரம்பிள்ளைகளுக்குந்தான்செய்தேன்வஞ்சம்
நேரில்வேதநாயகாநின்னடிதஞ்சம் இந்த

## 17. இராகம்-சுருட்டி-திசிரஜாதி-ரூபகம்.

பல்லவி.

தேவாதிதேவனே-தயை-செய்தருள்வாயே

அநுபல்லவி.

பாவ டலம்எடுத்துநீளும்
பாதகனும்என்னையாளும்
பந்தப்பகைசாடாமல்
சிந்தைத்துயர்கூடாமல்
நிந்தைப்பழிமூடாமல்
இந்தப்படிவாடாமல்

சரணங்கள்.

1 கற்பகோடிகாலம்போல அற்பவாழ்வினைமதித்தேன்
காமாகளங்கோமும் அகங்காரம்நெஞ்சினிற்பதித்தேன்
தற்பராஉன்பொற்பதாம்புயந்தாழ்ந்திடாதெணைத்துதித்தேன்
சாந்தமாம்யோகாந்தமார்க்கஞ்சார்ந்திடாமற்குதித்தேன்

கற்பதங்கனைநாளுஞ்சார்ந்து
நாசவினைகள்யாவுந்தீர்ந்து
ஞானந்தனிலேநீட
மோனந்தனையேநாட
வானந்தனையேதேட
ஆனந்தமுமேகூட (தேவா)

2 பாசமாம்பிசாசம்என்மனம்வாசஞ்செய்வதுமிலேயே
பாபமுங்கடுங்கோபமும்பலர்சாபமும்பெருமலேயே
நேசமும்விசுவாசமும்பிரகாசமும்எனக்கிலேயே
நிந்தையானஅகந்தைதழுடும்என்சிந்தையுங்கடுஞ்சிலேயே.
ஈசனேஎன்பாவம்நீக்கி
என்னையேஉன்தாசனாக்கி
இன்பக்கடலேசேரத்
துன்பக்கடலேபோர
அன்பர்க்கினமேசார
என்பொய்க்குணமேதீர (தேவா)

3 அன்பர்களிக்கஇன்பம்அளிக்கும்ஆனந்தப்பெருநதியே
அனவரதமுங்கனவிரதர்கள்அகத்தில்ஒளிருமதியே
துன்பசாகரம்என்பதுகெடத்தோன்றுமொபாரகதியே
தொண்டன்வேதநாயகன்மனப்பெண்டகமகிழ்பதியே.
நின்பதந்தனைநாளும்யேத்தி
நேசமாய்க்கவிமாலைசாத்தி
நீதிப்பயனைவிள்ள
ஆதிப்புடியேதள்ள
வேதப்பயனைகொள்ள
போதத்தினிலேதுள்ள. (தேவா)

—

18, இராகம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி

இந்தநிமிஷமேபாபநிவர்த்தி
எனக்கருள்வாய்சுவாமி (இந்த)

அநுபல்லவி.

எந்தநிமிஷத்தில்சாவுவருமோவென்
றேங்கியேநான்பயந்தேனே-உயிர்
நீங்கிடிலென்னசெய்வேனே-சுரர்கோனே (இந்த)

சரணங்கள்.

1 காலையோமாலையோநாளையோசாவெனுங்
காலக்கணக்கறியேனே-வந்த
யேலைமுடியுமுன்னோலையனுப்பிட
வேண்டாஞ்சொன்னேனென்றறியேனே-என்னை
ஆண்டாலுனைப்பிரியேனே-பெரியோனே இந்த

2 பொட்டென்றுதேகந்தான் சட்டென்றுவீழ்ந்திடில்
கிட்டஒருவர்கில்லாரே-குழி
வெட்டென்பர்பிரேதத்தைக்கட்டென்பர் மண்ணைமேற்
கொட்டென்பர்போவார்பொல்லாரே-ஆன்ம
நஷ்டம்வராமற்காண்பாரே-துயர்தீரே இந்த

3 கப்பல்இல்லாமலேஎப்படியேனுங்
கடலைக்கடக்கவொண்ணாதே-நாளும்
அப்படிநின்பததெப்பமில்லார்க்கந்த
ஆனந்தவீடுகண்ணாதே-நல்ல
ஞானந்தருவாயிப்போதே-கைவிடாதே இந்த

4 ஆதிமத்தியாந்தரகிதப்பிரபோத
அம்பதபுராதனநாதா-நாளுங்
காதலுடன்வேதநாயகனுள்ளக்
கமலந்தங்குந்திருப்பாதா-எனக்
கமலந்தரஇன்னம்வாதா-இடையாதா இந்த

---

19. இராகம்-கல்யாணி-அடதாளசாப்பு.

பல்லவி.

இந்தஉபகார மறவேனேபூமி
அந்தரமெங்கும் நிறை-கோனே இந்

அநுபல்லவி.

விந்தைநரஜன்மந்தாணமேவ அருள்நோக்கினாய்
தந்தைதாய்மனைசேயர் தந்தருளைநீக்கினால் இந்

சரணங்கள்.

1 குருதியாகியசேறு கூட்டி-நல்ல
கொழுமாமிசச்சுவரை நாட்டி
வரிஎன்புவிட்டங்கள் பூட்டி-கட்டிம்
வடமாநரம்புகளைமாட்டி

இருகாலில்நவவாசல் உடல்மனையைவிக்கினாய்
இன்பங்கள்நுகர ஐந்திரியம்ஆக்கினாய்
அரியஆன்மா அங்கு குடியுறப்போக்கினாய்
அந்தஆன்மாவில்நல் லறிவினைத்தேக்கினாய் இந்

2 பூமியாகியவீடமைத்தாய்-பஞ்ச
பூதாதிவூழியர் சமைத்தாய்
மாமதுரவுணவுகள் கொடுத்தாய்- அந்த
வானமாம்பந்தலும்எடுத்தாய்
சோமசூரியதாரகா தீபமேற்றினாய்
சுகவாயுவால்உஷ்ண சோகத்தைமாற்றினாய்
சேமவுணவாக்கவே தேயுவினைஆற்றினாய்
சீதக்கடங்கொண்டு தெண்ணீரைஊற்றினாய் இந்

3 கடலாறுகுளம்ஓடை தந்தாய்-மலர்க்
காவுகளம்உதவினை வெந்தாய்
தடமலைதருக்களும் வகுத்தாய்-வனம்
சார்மிருகபக்ஷிகள் பகுத்தாய்
கீடமானநவமணி உலோகாதிகீட்டினாய்
செகசோதியாகவே சிங்காரம்நாட்டினாய்
அடமின்றிநானாவிநோதங்கள் காட்டினாய்
ஐம்புலாதிகளுக்கும் இன்பங்கள்ஊட்டினாய் இந்

4 சிலபறவைகானஇசை பாடும்-வேறு
சிலபறவைதிருநடனம் ஆடும்
பலமிருகம்ஏர்வேலை புரியும்-நல்ல
பசுவாதிபாலினைச் சொரியும்
மலர்கனிகள்காய்இலைலை மரமெலாம்நீட்டுமே
மண்ணன்னம்விளைவித்து வயிறாரஊட்டுமே
சலதாமுமெங்களைத் தலைமுழுக்காட்டுமே
சர்வபொருள்களும்நல்ல சந்தோஷம்மூட்டுமே இந்

5 பித்தற்குநீசெய்பாரகமே-வளம்
பெரிதேனிதுமீதற்ப சுகமே
சுத்தற்குநீசெய்பேரகமே-பரம
சுகமெனவிரும்பும்என் அகமே

3 தாசர்கள்பரிபாலா-கலை
சாத்விக குணசிவா
நீசர்கள்பிரதிகூலா-சத்ய
நீதியுறுசெங்கோலா சா

ஆசாறுமுதல் நூலனே-அகி
லாண்டகோடி விலாசனே
நாசரகிதமூலனே-வேத
நாயகன்அநு கூலனே சா



## 22. இராகம்-கற்கடா-ஆதிதாளம்.

பல்லவி.

சிலம்நீதா தேவநாதா
சிறியன்மீதுவாதா அபேதா சிலம்

அநுபல்லவி,

மூலகாரண தயாபரவேதா
மோக்ஷசாம்பிராச் சியப்பிரதாயா

சரணங்கள்.

1 நன்மைதின்மைஇன்ன தென்பதுதெரியேன்
ஞானமார்க்கந்தனை யேயநுசரியேன்
சின்மயானந்த னேஜெபயபுரியேன்
தீயனுனான் பாபத்திற்பெரியேன் சில

2 தாயிருக்கப்பிள்ளை தயங்குதல்சரியோ
சாமிநீஎன்மனம் வாழ்வும்வரியோ
நீயிருக்கஎன்தன் துன்பம்உபரியோ
நிபேதாமசிக்க என்னுடல்கிரியோ சிலம்

3 ஜீவசிட்டிஸ்திதி லயஅதிகாரா
ஜென்மசாபல்லியப்பிர தானஉதாரா
தேவதேவகன பூசிதநீரா
சிறியன்வேதநா யகன்உபகாரா சில

## 23. இராகம்-உசேனி-ஆதிதாளம்.

### பல்லவி.

நின்பதமேதுணை ஐயா-மனத்
துன்பம்அகலஅருள் செய்வாய்

### அநுபல்லவி.

இன்பமகோததியே-இனியதயாநிதியே
அன்பர்பாககதியே-அமரர்க்கதிபதியே நின்

### சரணங்கள்.

1 என்மனம்இளகாத பொருப்போமாலை
என்றைக்கும்அதிக் குடியிருப்பே
தன்மமேஅதற்கரு வருப்பே-கெட்ட
தாமசகுணமென்றால் விருப்பே
நன்மைகெடுக்கும்இச்சை நாசக்கொருநெருப்பே
தின்மையெல்லாம்அகலத் திருவருட்கண்திருப்பே நின்

2 ஏதும்அறியேன்ஞான வாஸ்திரம்புவ
னேசாஉனக்குநான்எம் மாத்திரம்
சோதனைக்கெளியேன் அபாத்திரம்-அதி
தூயனேஎன்இன்னம் க்ஷாத்திரம்
வேதனைமிகக்கொண்டு மெலிவுற்றேன்-அகோராத்திரம்
சாதகமுறவேநீ தருவாய்மெய்ஞ்ஞானநேத்திரம் நின்

3 நீசனுன்வினைக்கெல்லாமூலம் என்தன்
நெஞ்சம்செய்வதும் பிரதிகூலம்
பாசபந்தஉலகஜாலம்-தன்னில்
ஈசனேகேளாயோ ஏழைநாணிடும்ஓலம்
தாசன்வேதநாயகன் தனக்குநீயருள் சீலம் நின்



## 24. இராகம்-முகாரி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஆள்வாயெனதுஉள முள்வாயெனக்குன்தன்
அடியிணையேதுணையே

### அநுபல்லவி.

நீள்சுககனியனே நேசர்க்கினியனே
நாள்வளர்தனியனே நயமறைத்தெனியனே ஆள்

சரணங்கள்

1 பேதைநான்பயனில்லாப் பேச்சிற்சண்டப்பிரசண்டம்
பிறரையயக்குவதிற் பெரியஉற்பாதபிண்டம்
வேதைதவினைஎனக்கு வினைசருக்கரைகண்டம்
விளைதருள்பரிஉனக்காயிரங்கோடிதண்டம்
வேதனே-வரப்பிர-சாதனே-ஆசீர்
வாதனே-சுரர்புகழ்கொள்-காதனே-நாதனே-எனை ஆள்

2 மனமொன்றுக்குரங்குக்குக் கனஅறமேஉபேக்ஷை
வாதனைநீக்கிடாமல் வதின்னமும்பரீக்ஷை
தினசரூபனே திவ்யமெய்ஞ்ஞானதீக்ஷை
திடமுடன்கொடுத்தருள் அதுவேஎனதபேக்ஷை
தேவனே-மனோ-பாவனே-மறைசொல
நாவனே-தயைநின்ற-சுபாவனே-ஜீவனேஎனை ஆள்

3 நிகரில்சனதெய்விக நின்மலசுலக்ஷண
நித்தியம்நினையும்பக்தர் நெஞ்சப்பிரதக்ஷண
சகலஜீவாத்மகோடி தாங்கும்சம்ரக்ஷண
சாஸ்திரம்புகலுஞ்சுரர் ஸ்தோத்திராமிர்பக்ஷண
தாங்குவாய்நெஞ்சில் ஓங்குவாய்துயரம்
நீங்கவேதநாயகன் பாங்கர்நின்றனுதினம் ஆள்

---

## 25. இராகம்-ஆரபி-ஆதிதாளம்,

பல்லவி

வேதநாயகனே-என்மீதிலுன்
திருவுளம் இரங்குவையே

அநுபல்லவி.

ஜீவன்முக்திபூர்ஜித-சிலர்பிதுரார்ஜித
தாவில்அதிபூஜித-சர்வசமயயோசித

சரணங்கள்.

1 சாதவாகமலம்போல் உனக்குயாவுந்திருஷ்டாந்தம்
சர்க்தனே அறியாயே நீஎனதுவிர்த்தாந்தம்
பரவும்பதங்களென்றால் பாலகர்க்குமானந்தம்
பலபதங்கேட்டுந்தயை பண்ணுறயோசித்தாந்தம்
பற்பலகற்பல உற்பனவிற்பன
கற்பனைசெப்பரும் அற்புதசுடப்பன

2 தனமுகவேண்டுவோர்க்குச் சல்லியோடுதானமோ
தானமுள்ளோர்க்குக்கானல் ஜலமதுபானமோ
கனசுகந்தேடெனக்குக் கவலைசன்மானமோ
கதியருள்வாயுனக் கதுபராதீனமோ
கர்த்த-சமர்த்த-பிரசித்த-சம்வர்த்தன
பக்தர்கள்-சுத்த-அகத்துறு-நிர்த்தன தேவ

3 தினமும்அனந்தட்ாவஞ் செய்வதென்சம்பிரதாயம்
சிந்தைக்கரங்கசப்பு வேப்பிலைக்கஷாயம்
இனவேதநாயகனென் றேற்றேன்உண்மைதேயம்
எனக்கில்லாவிடினும்அப் பெயர்க்கேனுஞ்செய்சகாயம்
எம்பர-உம்பரும்-அன்பரும்-நம்பிய
அம்பர-சம்பிரம-இன்பம்-நிரம்பிய தேவ

---

## 26. இராகம்-அடாணு-ஆதிதாளம்.

பல்லவி.

ஈசாநின்பொற்பாதமலர் நம்பினேன்-என்னை
இக்ஷணமேவந்து ரக்ஷணஞ்செய்தருள்

அநுபல்லவி.

தாசர்மனகம லாசனகேசர
சாசுவதயோக சாம்பிராஜ்யகனயோக
ஆசைக்கினிமைய அவாங்மனோகேசர
அண்டபிரமாண்ட அகண்டசராசர ஈசா

சரணங்கள்.

1 எத்தனைபேர் சுகித்தமர்வீட்டில்
எக்கிடம் பூச்சியமா-தயை
சித்தங்கொள்வாயெனப் பித்தனெனக்குத்
தினமனோராச்சியமா-நல்ல
நித்தனேஇன்ப மிகுத்தமுத்திநல்ன்
நீதரில்வானவ ரோதுவரோகலன்
சத்தில்வழக்கவர் பேசிஎன்னபலன்
தாயேஉற்றதுணை நீயேபின்வேறிலன் ஈசா

2 மாஞுணபாக சையோகமின்றிப்புவி
...ழ்ந்தவர்தாமெவரோ எங்கும்
தம்நெஞ்சுன்னரு காகவாராதிதற்
குழுக் குர்சுவரோ
...மாலயமெங்குஞ் சர்வகொள்ளையோ
நான்பயனில்லாமற் பேசிடுங்கிள்ளையோ
...லுமென்புத்தி தான்சுத்தவெள்ளையோ
ஐயனேநானென்ன தாயில்லாப்பிள்ளையோ ஈசா

3 வந்துன்தரிசனந் தந்தருளியென்
மனக்குறைதீரேனோ உன்தன்
சுந்தரபாதமென் சிந்தனையூன்றிச்
சுகக்கடல்சாரேனோ பெரும்
பந்தநெருப்புக்கென் சிந்தனைசெத்தையா
பாவியென்றென்னைக்கை நீவிடல்சத்தையா
விந்தைநலந்தத் திடல்பெருவித்தையா
வேதநாயகன் பங்கென்னசொத்தையா ஈசா

---

27. இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்

பல்லவி.

ஆதியேபரஞ்சோதியே எனை
ஆதரித்தருள்வாயே ஆதி

அநுபல்லவி.

ஓதிஉணர்வொண்ணு தோங்குங்குணகர
நீதிவடிவமுறு நின்மலசாகர

1 உலககாரியத்தில் நான்வெகுதிராணி உன்னை
உ...னுவதிற்கேவலம் அப்பிராணி
...லை என்பமெதனக் குண்டோமாராணி-என்தன்
நலைவற்றபோதுமோ ஆயிரந்தோணி
மலவசமாகிச் சோர்ந்தேன்
தலைவாஉன்னடி சார்ந்தேன்
...திக்கும்அடியவர்கள் துதிக்கும்ஆரிய
...க்குக னென்ன உதிக்கும்வீக்ய ஆதி

2 கண்ணுள்ளபோதல்லவோ கண்காட்சி-சிவன்
கழியுமுன்னல்லவோ புண்ணியமாட்சி
மண்ணில்எனக்குஞான அரசாட்சி மிக
வாய்க்கும்படி ஐயனேநீகடாட்சி
எண்ணரிய பிரதாபா
நண்ணரும் சுப்பிரதீபா
இணங்கும்அமரர்கள் வணங்குபெருவர
மணங்குலாவு சுகுணங்கொள்குருபர — ஆதி

3 தீதுபொறுத்தல் தெய்வகுலதர்மமே தீய
செய்கைகளே மனுஷகுலகர்மம்
ஓதிவிட்டேன்உனக் கென்உள்ளமர்மமே-என்மேல்
ஓவோஐயனே இன்னம்ஏன்வர்மமே
பாதகமலம்அணி வேதநாயகன்பணி
படர்ந்ததிருவருள் அடர்ந்திடும்பிரம — ஆதி

---

28. இராகம்-கேதாரம்-ஏகதாளம்.

பல்லவி.

தேவனேஉனைநம்பினேன்
அடியேனை ஆண்டருள் — தேவ

அநுபல்லவி.

தேவாதுரிக அபாவாசுகுண சுபாவா
மகாநுபாவா வாவா — தேவ

சரணங்கள்.

1 ஐயாநிலையறு பொய்யாம்உலகினில்
நையாவகைஅருள் செய்யாயோஉயர் — தேவ

2 வாராயோமுகம் பாராயோஅருள்
கூராயோவினை தீராயோகண — தேவ

3 பெரியாய்கைவிடல் சரியாநான்வினை
புரியாவிதம்அருள் சொரியாயோஉயர் — தேவ

3 நொந்தேன்வினைசுட வந்தேன்உனதிடம்
வந்தேன்சுகமில்ல தந்தேஅருள்புரி தேவ

5 நாதாஅருள்ஞான ஞாதாமனம்இரங்
காதாஅநுதினம் வேதநாயகப்பணி தேவ

---

### 29. இராகம்-காம்போதி-ஆதிதாளம்

பல்லவி

பரனேஅடியர்மனோ-கரனேநிமலஇன
கரனேநீ அருள்வரனே

அநுபல்லவி.

உரனேமிகும்புவன தரனேஅண்டசரா
கரனேபரமசுக கரனேதிரனேஅரும் பர

சரணங்கள்.

1 என்னைவந்திரக்கும்ஏழை தன்னைநான்தள்ளிவிடில்
ஈசனேகோபம்பண்ணுயோ-தந்தை
அன்னையேயிரக்கும்என்னை நீதள்ளில்எனக்கும்
அவ்விதமென்றே எண்ணுயோ
முன்னைநீஅனேகரைஉன் பொன்னடியிற்சேர்த்தனை
இன்னமும்பலபேர்தமைப் பின்னும்வினைதீர்த்தனை
என்னவேநான்கேட்டுன்மீது சொன்னேன்பலகீர்த்தனை
பின்னையொன்றும்வேண்டேன் அருள் உன்னையிதெபிரார்த்

2 உத்தமனேநான்பெரிய பித்தனுனாலும்எனை
அடுத்தவனேன்உன்னுயோ-பாரில்
சித்தமிசைபைத்தியமிருக்க பாலனைக்கை
விடுத்தகலுவாள் தாயே
முத்தொழிலில்முதல்தொழிலில்கொண்டுசெய்தயென்சடம்
முத்தஞானம்அளித்தெனைக் காத்தருளாயேன் அடம்
அத்தனேஅவ்விரண்டாந்தொழிலில்என்னசங்கடம்
அதுதரில்மூன்றாந்தொழிற் கஞ்சிடேன்இதுதிடம் பர

8 பாடுகெவியிற்கற்பனை தேடுவதல்லால்உள்ளருள்
கூடும்வகைகுறியேனே-என்னை
நாடும்எவரோடுமேவாதாடுவதல்லால் என்வாயை
மூடும்வகை அறியேனே
வாடுதலில்பாதமலர் சூடுபெரியோராக
வாசபுவனேசவளர்பாசவினைமாரக
விடுதவுதியாக அலையாடுகடற்பாரக
மீதுவேதநாயகன் எப்போதுமேகொள்தராக

---

30-இராகம்-பியாகடை-திரிபுடை-தாளம்

பல்லவி.

அம்புயப்பதம்நம்பினேன்ஐயா பரலோகசாதச்
சம்பிரமத்தைவிரும்பினேன்மெய்யா
கனதியாகக்கையா அம்

அநுபல்லவி.

தம்பமாம்அவலம்பம்வேறிலையே தேவாதிதேவர்கள்
சகிதமாகியசுகிதமாமலையெ மெய்ப்போதகிலையே

சரணங்கள்.

1 தினமும்அலையுமென் மனமேகீசகமா அடியேனுன்பால்இஷ்ட
சித்திவேண்டியே நித்தியம்யாசகமா
கனஅநீதனென்மீதரோசகமா என்சொல்உன்காதுக்குக்
கடினமாகியகொடியவாசகமா
நான் ஒருமசகமா அம்

2 மண்ணின்வாழ்க்கையில்எண்ணில்யாதனையே அதுநீங்கவேயருள்
மன்னிடாமலேன் இன்னஞ்சோதனையோ
திண்ணியம்பெரு புண்ணியசாதனையே அடியேனுக்கேஸ்வர
தீனமாகச்செய் ஞானபோதனையே
செய்தேன்வந்தனையே அம்

3 எண்ணிமகிழ்ந்திடு புண்ணியவிக்கிரகமே பரிசுத்தசீவர்கள்
இஷ்ட-பூரண துஷ்டநிக்கிரகமே
விண்ணிஞோர்தினம் நண்ணுசுகக்கிரகமே இனிநீபுரிந்தருள்
வேதநாயகன் தனக்கனுகிரகமே
பணியார்உக்கிரகமே அம்

---

31. இராகம்-ஆகிரி-திரிபுடை-தாளம்.

பல்லவி.

சம்மதிஎனக்குமெய்யனே உனைநினைக்க
நன்மதிதந்திடல் ஐயனே

அநுபல்லவி.

அம்மாவென்றழ மேன்மேலும்
வெம்மனநோயே சூழ்ந்தாலும் சம்

சரணங்கள்.

1 தன்னை உன்னவே கூடாதென்றே-தடைசெய்வோன்தான்
இன்னிலத்துண்டோ குணக்குன்றே
நின்னையே தொழவிரதம்
நேர்ந்தனை அநவரதம்
உன்னவே என்மனோரதம்
உதவுவாய் கருணாமிர்தம்
ஓங்கிவளர்தனம் நீங்கிபொழியினும்
வீங்கியுடல்பிணி தாங்கியழியினும் சம்

2 பதமலர்மேல் ஆசைகொண்டேன் உலகவாழ்வு
சதமலவென் றுண்மைகண்டேனே
நிதமுனைப் பணியுமதி
நீதரயி லையோவிதி
அதிற்குறையுமோ உன்னிதி
அண்டினேனு னுன்சந்நிதி
அட்டுரும்வறுமையோ டிடர்கள்சூழினும்
படருபணந்துயர்க் கடலில்ஆழினும் சம்

3 உத்தமபிரமசைதஅனியமே-சௌஜஅனியமேமெய்ப்
பத்தர்கள் அல்லா தாக்கஅனியமே
சுத்தமதுரபாஷணு
சோபனகுணபூஷணு
வித்தகசுவிசேஷணு
வேதநாயகன்போஷணு
விலகியேஎனை உலகம்நகைக்கினும்
கலகமர்கவேபலர்கள்பகைக்கினும்

32. இராகம்-கேதாரம்—ஆதிதாளம்.

பல்லவி.

ஐயனே உயர்-மெய்யனே.

அநுபல்லவி.

உய்யவே அருள்புரி செய்யபதந்தெனை ஐயனே

சரணங்கள்.

க. ஈசனேநான்ஆத்ம இரக்ஷண்ணியமே
இரங்கியருள்கடாக்ஷ விக்ஷண்ணியமே
தாசன்நானுனக்கென்னுந் தாக்ஷண்ணியமெகொண்டு
தந்தருள்வாய்விவேக தீக்ஷண்ணியமே ஐய

2 இகநிதிஅழிந்து போம்நில்லாது-அதை
ஈந்தனம்போவ மென்றால்செல்லாது
நிகழ்நித்தியசுகந் தந்தால்அல்லாது
நில்லாமல்நச்சும் என்வாய்பொல்லாது ஐய

3 கோதையர்மைந்தர் முதற்பரிசனமே சந்நரக
கூட்டம்அவற்மேல் கொள்ளுங்கரிசனமே—சந்தை
வேதைதரும்இது நிதரிசனமே
வேதநாயகனுக் குன்தரிசனமே ஐய



33. இராகம்-சயந்தஸ்ரீ—ஏகதாளம்.

பல்லவி.

நாதாநிரந்தரவிநோதா உன்தன் நாதா
பாதாரவிந்தம்எனக் காதாரம்தாதா

அநுபல்லவி.

வேதாந்தசார நயபோதா-பஞ்ச
பூதாந்தகால விபரீதா விரக்கியாதா-செக

சரணங்கள்,

1 பேருஞ்சர்வ புவநேசா-நல்ல
தாயர்மனலயவாசா பவநாசா—செய நாத

2 மாவந்தரலராகாதா-வினை
பேரவெனநீசொலிற் போகாதா-சாகாதா-புவி

3 மாயையின்சபதமேஙிசமா-அந்தம்
பேயைக்கொள்வ துனக்கவசமா தாமசமா-தெய்வ

4 அடியன்மனங் கடின இரும்பா-அருங்
கொடியவினை அதற்குக்கரும்பா-நானேர் துரும்பா-செக

5 ஆதிமத்திய அந்தரகிதா-சுயஞ்
சோதிமய அமரர்சகிதா-கனசுகிர்தா-மகி

6 மாயாந்தகாரம் அகில்கிரணு-வேத
நாயகன்தொழுமலர்சரணு அந்தக்கரணு-தெய்வ

---

## 34. இராகம்- புன்னுகவராளி-ஆதிதாளம்.

### பல்லவி.

காக்கவேண்டும்கடவுளே நீகாக்கவேண்டும்

### அநுபல்லவி.

சாக்கவேண்டும்எனை அன்பன் ஆக்கவேண்டும்என்கவலை
நீக்கவேண்டும்பாவமெல்லாம் போக்கவேண்டும்தினமெனைக்

### சரணங்கள்.

1. பண்ணியவினையுமனம்-எண்ணியவினையும்வாக்கில்
கண்ணியவினையும்திரக்-கண்ணியவரந்தந்தெனைக் காக்க

2 ஆரணனேநீகொடுத்த தாரணிச்செல்வத்தின்மனம்
பூரணமானேன்பாவநிவாரணசுகந்தந்தெனை காக்க

3 எந்தவேளைமரணமோ அந்தவேளைவந்துன்அர
விந்தமலரேநிகருஞ் சுந்தரஅடிதந்தெனை காக்

4 பூதமுதலானஜீவபேதகாரணனேநாளும்
வேதநாயகன்பணிபிரக்கியாதபூரண [illegible] எனைக் காக்

---

35. இராகம்-கேதாரகௌளம்-திரிபுடைதாளம்

பல்லவி.

ஈசனேமல நாசனேமன வாசனேபிர காசனே

அநுபல்லவி.

பாசஇருளினை நீக்குவாய்-உன்தன்
பதத்துக்கென்உற வாக்குவாய் ஈச

சரணங்கள்.

1 சிறியன்மதிவெறும் ஸ்தூலமே-அதன்
செயலெல்லாம் அலங்கோலமே
குறிகொள்பாச நீர்மூலமேசெய்து
குணந்தந்திட இதுகாலமே
அறியநானிடும் ஓலமே-செவிப்
பொறிகொண்டுதவ னுகூலமே ஈச

2 அடருங்காமங்கொள் பேழையே-நிகர்
ஆகும்உடலெனும் பாழையே
திடமென்றுன்னும்நான் ஏழையே-குறை
தீறக்கற்றறிமோழையே
தொடுசிலேட்டுமங் கோழையே-உயர்ந்
திடுமுன்தொலைபவப் பீழையே

3 என்னைக்கெடுத்திடக் கங்கையே-இடை
இருக்கிக்கட்டிக் கொண்டிச்சையே
முன்னைவருந்திடக் கொச்சையே-கொண்டுன்
முன்வந்திரந்தனன் பிச்சையே
உன்னுமாவரத் தியாகமழைபொழி
பன்னும்வேதநா யகன்வெல்வினையொழி ஈச

---

39. இராகம்-ஆனந்தபைரவி-ரூபகதாளம்

பல்லவி

நிரந்தரனேமா துரந்தரனே-கன
நிர்மலத்துவ தர்மகர்தத்துவ நிர

அநுபல்லவி.

பரந்தபொருள் சுரந்துகாத்தருள்
வரந்தென்வினை விகாரந்துதீர்த்தருள்

சரணங்கள்.

1 சித்தமிரங்கியென் னத்தனேநீதயை
செய்யிற் பிழையேனே-கன
நித்தனேஎன்பிழை எத்தனையென்னிலும்
நீங்கித்தழையேனே-நல்ல
உத்தமம்என்னிடம் சுத்ததரித்திரம்
ஒன்றேபலவிதம் என்துர்ச்சரித்திரம்
நித்தம்என்னெஞ்சம் உடுத்தமால்வஸ்திரம்
நீக்கிஎனைச்சேர் சௌபாக்கியசமுத்திரம் நிரந்

2 உதிமதிகதிர்முத லெல்லாஞ்செல்லும்
உன் ஆணைவழியே-என்தன்
மதியொன்றே அந்தவிதியைக்கடந்து
வளர்க்குமாபழியே-இந்தப்
பொதிமதிக்கேன் தனியரசாக்ஷியே
புனிதஞ்செய்குவ துன்பெயர்மாக்ஷியே
பதிதனென்பதற் கென்செய்கைசாக்ஷியே
பாவனநீ யனைவாய்அத்தாக்ஷியே நிரந்

3 பாரிருள்நீங்காத சூரியனாலேஅப்
பாருக்கென்ன சாரம் ஞான
ஆரியனேஉன்முன் சாரலாமேஎன்
அகத்தில்அந்தகாரம் நாளும்
சாரமில்லாஞ் சமுசாரகோலாகலம்
சாருமெனக்கென்றுந் தீராவியாகுலம்
வீரனேநீயறிவா யென்பலாபலம்
வேதநாயகனே நீதருவாய்நலம் நிர

---

37. இராகம் ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

அப்போதுனைத்தொழல் அரிதையா-உனை
இப்போதேதொழ அருள்செய்வாய்

அநுபல்லவி.

முப்போதும்உனருமுதலேசுரர்தொழும்
அப்பாமரணம்உற் றடியேன்உடல்விழும் அப்

சரணங்கள்.

1 திடமாற்பிற்பாறைபோலவே திரண்டுகோழைகள்கட்டும்
சிறுதும்பேசாதவண்ணஞ் சேர்ந்திருக்கிப்பல்கிட்டும்
படர்ஜீவவாயுவெலிப் படஎங்கும்ஓடிமுட்டும்
பாயுதுவெளியெனப் படுமாயைத்தொடைதட்டும்
பலங்கொள்உணர்வது கலங்கிநிலைகெட
இலங்குடலைஉயிர் விலங்கிமெலிவுறும் அப்

2 மனைவிசேய்கடன்காரர் மட்டிவார்த்தைவிரிப்பர்
வகையெயக்கென்னவென்று மணல்கயிறுத்திரிப்பர்
மனையிற்பொருளையெல்லா மாவலைபோட்டரிப்பர்
வகையொன்றுமின்றேனையால்மணித்தொண்டையைநெரிப்
மணங்குகழல்கற முடங்குசெயலொடு
திடங்கொள்கரணமும் அடங்கிமாளுறும் அப்

3 அழுகைக்குரலும்டல முழக்கமும்நாறுபேதம்
ஆகப்பலபக்கத்தும் அடக்குமேகடறுதம்
விழுகையுறும்உடலின் வேதனையும்பிரமாதம்
வேதநாயகனேஅப் போதுனைஉன்னலேதம்
விரிக்கும்இடர்பல தரிக்கும்உடலினை
முரிக்கும்இசிவோடு மரிக்கும்வேளையில் அப்

---

## 28. இராகம்-காம்போதி—ஆதிதாளம்.

பல்லவி.

எவ்வகையிலும்நானே நல்வழிபற்றி
உய்வகை அருள்கோனே எவ்

அநுபல்லவி.

செவ்வழிநிற்போர்மனத் தேன்கள்வளரும்பூவே
பௌவமாசப்பேயரின்பம் பழுக்குங்கற்பகக்காவே எவ்

சரணங்கள்.

1 வறியார்க்கிடவென்றாலென் குறியகைகளிற்சூலை
வாங்கீட்டிஞன்உலகும் வானமும்எந்தழலை
பிறர்நோய்செய்யில்எனக்குப் பெருங்கோபாக்கினிச்சுவாலை
பேதைஎன்பிழைஎழூ திடவேண்டுங்கோடியோலை

2 நல்வழிநடக்கவென்றால் இருகாற்குந்தளை
நீளுந்துர்வழிநடப் பதில்லைக்குண்டோ களை
புல்வினையென்செவி பொய்கள் நுழையும்வளை
புண்ணியப்ரதேசமென்றால் புகலதில்லைதளை எவ்

3 உன்னைத்துதிக்கவென்றால் எலகிப்புன்வாய்க்குநோயே
ஊர்வம்புபேசஎனக் குடம்புழுதும்வாயே
மின்னைநிகர்பிரபஞ்ச வேதனைநீக்குவாயே
வேதநாயகனுக்குச் சாதகமானதாயே எவ்



39. இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்

பல்லவி.

கதியிதென்றுமுகம் பாரையா
கதிநினையன்றி ஆரையா

அநுபல்லவி,

மதியுள்ளோர்கள் ருசிக்கும்அமிர்த
வாரியேஅருள்மாரியே கதி

சரணங்கள்.

1 உனக்கென்னுள்ளெண்ணம் அந்தரங்கமா
உதவிதான்செய்யிற் பங்கமா
எனக்கிங்கதுவு அங்கமா
இன்னமென்ன ஆடங்கமா
தனக்குநிகரில்லாத ஞானசாகரா குணாகரா கதி

2 அதஞ்செய்யும்வினை கற்கண்டோ
அதைத்தொலைப்பதென் பலங்கொண்டோ
நிதம்நான்செய்வது வீண்தொண்டோ
நீயல்லாற்பதி வேறுண்டோ
பதகமங்கள்பரவும்பத்தர்கள் பாக்கியமே-மனோக்கியமே

3 அன்னைக்குபிள்ளைமேற் குரோதமா
அருள்செய்வது பிரமாதமா
வினைக்குநான்முதற் பந்தமா
விலக்கஇன்னம் விவாதமா
நினைக்கும்வேதநாயகன்பணி நீதனேபிரபோதனே கதி

40. இராகம்-சாமா-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஜாலஞ்செய்வதேதோ ஐயா
சீலம் ஈயொண்ணுதோ மெய்யா

அநுபல்லவி.

ஞானமெல்லாந் தாங்குங்கையா
நற்குணமில்லார்க்கு வெய்யா ஜால

சரணங்கள்.

1 பெண்டுபிள்ளையோடினமே
பேய்சுரைபடர் இனமே
அண்டும்இவரால்தினமே
ஐயையோநொந்தேன் மனமே ஜால

2 பாழுமனமே மற்கடம்
பண்ணும் அகடவிகடம்
ஊழ்வினை தருமசங்கடம்
ஒழித்துநீ யருள்வாய்தினம் ஜால

3 நீதிவழுவாச்செங்கோலா
நித்திய சங்கீதலோலா
வேதியர் பரவுஞ்சிலா
வேதநாயகன் சேர்கேரலா ஜால

41. இராகம்-சாமா-திரிபுடைதாளம்.

பல்லவி

வேதநாயகனே எவ்விதமுன்உன்
பாதமலர் அருளே

அநுபல்லவி.

போதநாயகனே பொய்நீக்கிய
புனிதநாயகனே மெய்தாங்கிய வேத

சரணங்கள்

1 என்னுமனமேதுர்க குணங்கணீள்பாண்டம்
ஏதும்அறிகிலன் ஞானகாண்டம்
பண்ணும்பாவங்களோ பிரமாண்டம்
பகரும்வார்த்தைகளே அபாண்டம் வேத

2 மண்ணில் அநுதினம் பூதகேதம்
வளர்ப்பதெனக் ககலாஉத்தியோகம்
புண்ணியவுடல் வளர்த்திடும்வைதிகம்
பூண்டிலேன் அருள்வாய் விவேகம் வேத

3 விதனவிஷதருகி ரகஸ்தாரசிரமம்
விரும்புவோர்க்கிதில் விலகிடாச்சிரமம்
நிதங்கொண்டேன் இந்தவாழ்விலேபிரமம்
நீங்கவேதநாயகனே அருள்மகிழன்பம் வேத

---

42. இராகம்-காம்போதி-ஆதிதாளம்

பல்லவி.

எனக்குக்கட்டியவீட்டை எனக்குகொடாதிருப்
பதென்ன ஞாயம் ஸ்வாமி

அநுபல்லவி.

இனிக்கும்அவ்வீடுசெய்த தெங்கள்நிமித்தமே
என்றுநீசெய்ய வில்லையோவாக் குத்தத்தமே
உனக்குநான்பிள்ளை யென்ப தலகம்பிரசித்தமே
உவந்துகேளாயே என்பிரலாசந்தமே என

சரணங்கள்.

1 சித்தவிகாரமுறா ரார்க்குச்செல்வுலகம்
சிறப்புள்ள தெனில்கேரனே-நல்ல
உத்தமர்க்கமைத்தநித்தி யானந்தமுத்தியின்பம்
உணர்வதெப்படி நானே
சுத்தமணிபொன் அங்கேதுரும்புகள் ஈட்டமே
தொல்லுலகின்பமெல்லாந் தன்பமாரபால்கூட்டமே
அத்தமியாநித்திய சூரியர்அன்பக்கூட்டமே
அநுதினம்எனக்காக விட்டினில்நாட்டமே என

2 முகமுகாகஉனைத் தரிசிக்கும்பாத்தியத்தை
மொழியநினைக்க ஒண்ணுமே- இந்த
இமைமிசைமனமொடு புலன்கட்கட்டாத அந்த
இன்பம்எப்போதநண்ணுமோ

அகமிசைஉன்னளன்ன ஆனந்தம்பொங்குமே
ஆயிரங்கோடி சூரியர் ஒளிமங்குமே
நிகராகுகீத விநோதங்கள்எங்குமே
நிரதிசயானந்தம் நிரந்தரம்தங்குமே என

3 இகமனைகட்டிநரர் குடும்பம்பிரதிஷ்டைசெய்த
இணையரும் எந்தாயே-நித்திய
சுகமனை தன்னில் பிரவேசிக்கவேநல்ல
சுதந்தரம்அருள்வாயே
அகிலலோகப்பிரபஞ்ச நாசசூத்திரனே
அற்புதபரமசித்தி யானந்தக்ஷேத்திரனே
நிகரது சௌந்தர நிர்மலகாத்திரனே
நிதம்வேதநாயகன்தொழுங் குணபாத்திரனே என

43. இராகம் செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயனேஉன் அழகைக்காண
ஆசைநான் கொண்டேனே

அநுபல்லவி

வையமீதுபல அழகையும்
வகைவகையா வருத்துக்காட்டும் ஐய

சரணங்கள்

1 உதய சூரியன்சோமன்தாரகை
உன்முன்னே மின்மினியே
நிதிநவமணி யென்னும்குப்பைகள்
நிகருமோஉனை இனியே ஐய

2 கனியுந்தேனும் பாலும்சீனியும்
கண்டும்கரும்பும் சிறுமை
இனியஉனது தரிசனத்தின்முன்
இவைகள்யாவும் வெறுமை

3 செழுமையாகிய வண்ணமலர்கொள்
சிங்காரவனக்காட்சி
அழகின்ஆலய உன்முன்
அதற்கெத்தனையோ தாட்சி

4 அதிசவுந்தர மயில்குயில்கிளி
யாதிபறவைக்கூட்டம்
விதியின் அவைசெய்யுன்னழகின்முன்
வெட்கிப்பஞ்சுபோ லோட்டம் ஐய

5 சத்தஸ்பரி சரசரூபகந்தத்
தான் அல்லாதபொருளே
எத்தன்மைஉன துருவென்றறிய
இன்பக்காட்சி அருளே

6 பதிற்றீசெய் பலபொருள்களைப்
பார்க்கப்பார்க்க வடிவே
அதிசயம்தரும் உன்தன் அற்புத
அழகினுக்குண்டோ முடிவே ஐய

7 பிறந்தநாள்முதல் தாயைக்காணாப்
பிள்ளை தன்னை ஒத்தேனே
சிறந்தவேத நாயகாஉன்மேல்
சிந்தையாவும்வைத்தேனே ஐய

44. இராகம்-மாஞ்சி-ரூபகதாளம்

பல்லவி

என்னைநீஆளுவாய் ஏகனே-யோகனே

அநுபல்லவி.

பொன்னை மாதைப்பூவை எண்ணம்
பூண்டுநான்கெடாதவண்ணம்

சரணங்கள்

1 யாதனுசரீரமே யாதுமில்லைசாரமே
வாதபித்தவுகாரமே வாதனைகள் அபாரமே
மலநிவாரணவடிவபூரண
நலஉதாரண ஞானகாரண

2 எந்தநாளும்கிலேசமே என்னெஞ்சிற்பிரவேசமே
பந்தவினையைநாசமே பண்ணிநீசெய்வாசமே
பதிதபாவன பரமஜீவன
அதிகசோபன அகிலஸ்தாபன என்

3. அன்னை தந்தைநீ அல்லவோ ஆயிரந்தரஞ்சொல்லவோ
என்னைமாயைகொள்ளவோ எங்குநான்இனிச்செல்லவோ
ஏதபேதகா இனியசாதகா
வேதநாயகா விமலதாயகா என்

---

45. இராகம்-சைந்தவி-திரிபுடை-தாளம்.

பல்லவி.

ஏழைக்கிரங்க ஒண்ணுதா-இந்த ஏழை

அநுபல்லவி.

ஆழக்கடல்உலகை ஆளும்விநோதா ஏழை

சரணங்கள்.

க. சாடும்ரண்டக் காற்றாலே-திசை
தப்பியஅலைபடும் கப்பலைபோலே
நாடும்பிரபஞ்ச மாலே-என்னை
நைவிக்கவாடினேன் ஞான்புவிமேலே ஏழை

2. நீசெய்வதெல்லாம் சகாயம்-இங்கே
நிராதரம்என்செய்கை யாவும்அன்னியாயம்
ஈசனேநின்பதநேயம் எனக்
கெள்ளளவுமில்லை ஈதென்னமாயம் ஏழை

3. அற்பசுகத்துக் குழைத்தேன்-பாரில்
அநுதினம்ஆயிரம் பொய்சொல்லிப்பிழைத்தேன்
பற்பலதீவினை இழைத்தேன்-துன்பப்
பாரம்பொறுமலே பரிந்துன்னை அழைத்தேன் ஏழை

4. ஆம்பத்தினி மணவாளா-அகி
லாண்டபிரமாண்ட அகண்டகோளா
வான்மகிழ் தீனதயாளா-தினம்
மகிழ்வேதநாயகன் வணங்கும்பொற்றாளா. ஏழை

46. இராகம்-தன்யாசி-ஆதிதாளம்

பல்லவி.

கருணாகரப்பரம்பொருளே அடியனைக்
கண்பார்த்தருள்வாயே கருணா

அநுபல்லவி.

இருணாசஞ்செயும் இரவிசமான
தெருணாடியதேஜோமயம்ஆன கருணா

சரணங்கள்.

க. தோன்றினநாள்முதல் சுகுணமொன்றறியேன்
சொப்பனந்தன்னிலுந் துர்க்குணம்பிரியேன்
ஈன்றவனீயென என்றுமேகுறியேன்
என்னசெய்வாயோவென் றேங்கினேன்சிறியேன் கருணா

2. தரணியிலநான்ஒரு தருவெனமுளைத்தேன்
தமகுணம்யாவுமே யாகையாக்கிளைத்தேன்
கருமமாகியவிஷக் கனிகளைவிளைத்தேன்
கண்டனைசெய்வையென் றஞ்சியேகளைத்தேன் கருணா

3. நிகிலலோகங்கட் கெல்லாம்நீயதிகாரி
நிச்சயமாஎன் மனம்நினக்கொருபாரி
அகிலந்தனிலேஅந்த மனம்அகங்காரி
அடக்கிஆளாவிட்டால் அழியாளோநாரி கருணா

4. அழகுக்காலயமான அமிதசுந்திரமே
அண்பருக்கருண்மழை பொழியுங்கந்தரமே
தொழுதிடும்வேதநாயகன் சுதந்தாமே
துணைநீஉனை நம்பினேனிரந்தரமே. கருணா

---

4எ. இராகம்மோசனம்- ஆதிதாளம்.

பல்லவி.

எனின்னம் தாமதமையா
என்னிடம்வர எனின்

அநுபல்லவி.

தானேஉமக்குமுத்தித் தலமென்றுநினைறயோ
வானமுத்தரைவிட்டு வாமனமிலையோ எனின்

சரணங்கள்.

க- சூரியனை துண்ட அகன்றீரோ-அந்த
சோமனுக்கொளிதரச் சென்றீரோ
பாரினைப்புரட்டியே நின்றீரோ-அதில்
பகல்இரவுண்டாக முயன்றீரோ
காரிலிருந்து கனமழைசொரிந்தீரோ
கற்பத்தில்சிசுக்களையே புரிந்தீரோ
சாரும்பல்லுயிர்க்குயிராய் விரிந்தீரோ
சர்வலோககாரியஞ் செய்துதிரிந்தீரோ ஏனின்

2. அண்டகோடிகளைத் தூக்கினீரோ-நலம்
கண்டகர்உலகை நீக்கினீரோ-கடல்
கரையைக்கடவாமல் தேக்கினீரோ
அண்டும்பல்லுயிர்க்கமுது ஊட்டுகின்றீரோ
ஐம்பூதங்கட்கும்வேலை காட்டுகின்றீரோ
மன்றுங்கனிக்குச்சுவை கூட்டுகின்றீரோ
பலருக்குப்பலவண்ணந் தீட்டுகின்றீரோ ஏனின்

3. மரஞ்செடிபயிர்கள் நிறைத்தீரோ-அவை
வளரவேதண்ணீரை இறைத்தீரோ
சுரர்கள் இசைகேட்டுக் களித்தீரோ-நல்ல
தொண்டர்இதயத்தில் ஒளித்தீரோ
பரமகிருபாகர பரவிதநேசரே
பரமதகண்டன் பாபவிநாசரே
சருவவிநோத சராசரவாசரே
தாசன்வேதநாயகன் தன்பிராணேசரே. ஏனின்

---

48. இராகம்-மத்தியமாவதி-ரூபகதாளம்.

பல்லவி

இவளவுதான் ஐயனே-அதிகம் அல்ல
இரங்கிநீ யருள்மெய்யனே.

அநுபல்லவி.

அவனியில்வளரும் மூவாசையைப்பரிகரி
எவ்வளவுமேதுன்பம் இல்லாமல்ஆதரி
இதயமலர்தரி விதனமதுபிரி
நிதமும்அருள்புரி இதுவேசரிசரி இவ

சரணங்கள்.

௧. எனையெந்நாளும் நீங்காதே-நான்போம்
இடமெங்கும் கூடவாயின் வாங்காதே
வினையனென்றென் மேற்கோபம் வீங்காதே-மன
வேதைசுமக்க என்னால் தாங்காதே
நினைவிலும்தீதைநான் நினையாமற்பார்த்திரு
நித்திரைசெய்யும்போதென் மக்கத்தில்காத்திரு
நெடியநிலைபெறு-கொடியபிழைபொறு
அடியமனமுறு-கடியதுயர்அறு இவ

2. மாயையில்மனம்புக ஓட்டாதே-என்னை
வஞ்சனைக்காளென்று சுட்டாதே
ஆபிரம்தண்டம் என்சொல்தட்டாதே-உன்
தனுக்கிரகமின்றி நலங்கிட்டாதே
நாயேன்விரும்பிய நல்லவரங்கள்கொடு
நரகைஅடைத்துமோக்ஷ நாட்டைத்திறந்துவிடு
நனவுகொடுகொடு சினமும்விடுவிடு
தினமுமகிழ்வொடு-கனசுகுணம் இடு இவ

3. நலமன்றிக்குறையை ஆராயாதே-பெரு
நன்மைகள்கொடும்பதில் ஓயாதே
பலவேலைஇட்டேனென்று காயாதே-அற்பப்
பாக்கியம்நான் கேட்கினும் ஈயாதே
புலனில்வேதநாயகன் புகழும்சுகுணசீலா
பூதபவிஷியவர்த்த மானமெனுந்திரிமாலா
போதமழைபொழி-மாதர்மயலழி
பாதகமதொழி-ஏதமறவிழி இவள

---

49. இராகம்-சாரங்கா-அடதாளசாப்பு.

பல்லவி.

ஆதரித்திடநல்ல தருணம்-என
தையாஉனக் கனந்தஞ்சரணம் ஆதரி

அநுபல்லவி

பாதகநாசனே-பரமகிருபாசனே
சாதகமோசனே- தர்மப்பிரயோஜனே ஆதரி

சரணங்கள்.

1 என்பழிமறைப்பதில் யானேதப்பாததாளம்
இதரார்ப்பழிதூற்றலில் என்வாய்பெரியமேளம்
இன்பின்மனப்பேராசை அம்புவியின்நீளம்
அண்டம்வசமானாலும் அடங்காப்பெருவேதாளம்
ஆட்டிமயல்வலை பூட்டுமெனுதினம்
கோட்டிசெயும்வினை ஓட்டியடியனை ஆதரி

2 ஓடியலையநெஞ்சுக் குலகவானும் அற்பம்
உன்னிடம்வரவென்றால் ஒழியாதஅசந்தற்பம்
தேடிநற்கருமங்கள் செய்வதுங்கஜகர்ப்பம்
தீவினைசெய்வதேஎன் சிந்தையின்சங்கற்பம்
திருத்தமுடனேஎன் கருத்துநலமிசைப்
பொருத்தமுறச்செய்து வருத்தந்தொலைத்தெனை ஆ

3 என்குறைகாணவென்றால் என்னிருகண்ணும்ஊனம்
இதரார்பிழைகாணக்கண் இரவிகோடிசமானம்
வன்கண்மொழிகளுக்கென் வாயேமுக்கியஸ்தானம்
மதுரச்சொல்பேசவென்றால் மாறாததீர்க்கமோனம்
வாதமொடுபல பூதகாரண
வேதநாயகநீதனே எனை

50 இராகம்-நாதநாமக்கிரியை-திரிபுடைதாளம்.

பல்லவி

உன்னைநம்பினேன்ஐயனே எனையாதரி

அநுபல்லவி.

என்னைநம்பிரமை தன்னைமுகம்பாராமல்
அன்னைபிதாபோநீ கைவிடலாமா
நான்கெடலாமா
துன்பப்படலாமா உன்

சரணங்கள்.

1 தனமுமின்னார்சுபு வனமும்உலகவாழ்வின்
கனமும்வேண்டிலன இதுதேராயோ
தினமும்உனைக்கருது மனமும்உனதுதரி
சனமும்வேண்டிலன் அருள்கூராயோ
மருள்தாராயோ
பொருள்தாராயோ உன்

2 படிமீதில்என்ன முடியாவுதவிகள்
அடியேனுறச்செய்த பெரியானே
கொடியேன்உனைஅரை நொடியாகிலுந்தொழும்
படியேஅருள்நலம் பிரியானே
அயர்குரியானே
தீர்க்கரியானே உன்

3 அயமேபெருங்கல்லின் மயமேயெனும்இரு
தயமேமெழுகென உருகாதோ
ஸ்வயமேபரமாதி சயமேவேதகாயகன்
நயமேவினைசெய்வம் பருகாதோ
துன்புகருகாதோ
இன்புபெருகாதோ உன்



51 இராகம்-பந்துவராளி-ரூபகதாளம்

பல்லவி.

கடைக்கண்ணால் எனைப்பாராய் உன
தடைக்கலம் வினைதீராய் கடை

அநுபல்லவி.

கிடைக்கவொண்ணைப்பதந்தாராய் நலம்
படைக்கவேஅருள் கூராய்-அருட்
கொடைக்குநானென்னவே யவதரித்த
கோலாகல-மூலாஅநு-கூலாகுண-சீலாநிதம் கடை

சரணங்கள்

1 வஞ்சகமாயையில் ஆழ்ந்தேன்-ஒரு
தஞ்சமென்றுன்னடி தாழ்ந்தேன்
அஞ்சலென்றேயெனை ஆதரித்தாளுவாய்
ஐயாமிகுபொய்யால்மனம் நையாதருள்செய்யா ஒரு கடை

2 ஐயனேதீரா யென்பாபம்அருள்
செய்யஉனக்கென்னகோபம்
வையகமாதிவளர் அண்டமனைத்தினும்
வாசா-புவனேசா-மறவாசா-பிரகாசா ஒரு கடை

3 அஞ்சலெனில்உன் வாய்நோமோ—ஏழை
நெஞ்சம்வருந்திடலாமோ
பஞ்சமோகைப்பொருள் கொஞ்சமோபூபரி
பாலா அநுகூலா ஒரு மேலாமுதல்நூலா

4 இத்தரைமீதினில் நீயே-நல்ல
பத்தரைக்காக்கவந்தாயே
சித்தமுவந்தெனை நித்தமும்ஆளொளிர்
தேகாகனயோகா அதிதியாகா தனியேகா குளிர்

5 பூதலம்போற்றும் பொற்பாதா அரு
மாதவஞானப் பிரகாசா
வேதநாயகன் பாடுந்தமிழ்க்கருள்
வேதாஉபர்நீதாகன தாதாநயபோதா உன் கடை

---

52 இராகம்—அசாவேரி-திரிபுடைதாளம்

பல்லவி.

பாசத்தால்மனம் வாடினேன் உன்தன்
வாசத்தால்மலர் கூடினேன் பாச

அநுபல்லவி;

நேசத்தோர்கள்கை வல்லியமே உயர்
நிர்மலாதித்த துல்லியமே கன
மாசற்றோருக்கும் பிரபல்லியமே ஜெகம்
மகிழும்பக்தவாற் சல்லியமே மல பாச

சரணங்கள்.

1 நினைவிலேன்பிழையாவுமே எண்ண
நினைக்குந்தானென்ன சாத்தியமா
வினைவருத்தும் இந்திரியப்பேய்தனக்
கித்தனை ஆகாத்தியமா
வினைஎனக்கு விரோதியா-என்றும்
விலகிடாக்கர்வியாதியா கொடு
மனமுமேபிரதிவாதியா கெட்ட
மாயைஎன்னதாயாதியா ஜியா பாச

2 இருதலைக்கொள்ளி எறும்புபோலெனக்
 கிடைவிடாமன வாட்டமா
மருவும்பந்தப்பாசசு தன்னேடு
 மாறிடாதபோராட்டமே
மருமமாயாவிகாரமே செய்யும்
 கலகஜாலம விஸ்தாரமே நல்ல
தருமம்எனக்குத் தூரமேபின்னும்
 தப்புகள்கப்பற் பாரமே-ஐயா பாசத்

3. வளர்கல்லியாணத்தில் தாலிபூட்டிட
 மறக்குமூடர்கள் போலவே
தளர்பிரபஞ்சவி யாபாரத்தால்உன்தன்
 தாள்மறந்தனன்சாலவே
உள்வியாதிக்காரோக்கியமே நிதம்
 உன்னுவோர்கள் பனேக்கியமே
விளையுமாமறை வாக்கியமேதொழும்
 வேதநாயகன் பாக்கியமே பந்த பாசத்

---

## 53- இராகம் கன்னடகௌள ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா-ஞானஜோதிநா-ஒண்ணுதா ஆதி

அநுபல்லவி.

பூதலம்பரவும் விநோதனேகன
அநிதமாயஇருள் பேதமாகவே ஆதி

சரணங்கள்

க- காமக்குரோதமதம் லோபம்-அகங்
காரம்பொய்மாற்சரியங் கோபம்-இன்னும்
பூமியிற்பலபலபாபம் செய்யும்
புல்லன்மனம் அவித்திபர்ரூபம்-நல்ல ஆதி

2. பெண்டுபிள்ளைகள் சமுசாரம்-முதற்
பேசும்லௌகீக வியாபாரம்-தன்னில்
மன்றுமேமோகாந்த காரம்-துயர்
மாற்றிபருள்வை கிர்விகாரம்-நல்ல ஆதி

3. பாவக்கடல்கடக்குங் கலமே-தொண்டப்
பயிர்கள்வளருந்தெய்வநிலமே-கன
நாவலர்போற்றிடுஞ் நிர்மலமே-வேத
நாயகநாதனுன் அடைக்கலமே-நல்ல. ஆதி

---

### 54. இராகம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய்-எனக்
கெந்தவரங்களு மில்லையென்றாலும் இந்த

அநுபல்லவி.

சந்தாபமாகத் துலங்குந்தெய்வீகனே
சந்ததமும்புவி தாங்குந்நிர்வாகனே இந்த

சரணங்கள்

1. காயசித்தங் கலங்கிநையாமல்
கண்டவர்க்கெல்லாம்நான் தொண்டுசெய்யாமல்
மாயப்பிரபஞ்சத்தில் மாட்டிவையாமல்
மாதர்கண்ணைப்பெண் மனத்தில்தையாமல் இந்த

2. எங்கெங்குமேஉன் னுருவமாய்மின்ன
என்னைவேறின்றி உனைமனமுன்ன
மங்காகாமமென் வாய்நிதம்பன்ன
வார்த்தைகள்யாவுமுன் வார்த்தையாய்மன்ன இந்த

3. சுத்தசைதன்னிய நிலைமையில்சார
தோஷகர்மாவைப் தங்கறுந்தீர
அத்தனேநித்த முனைக்கண்புகூர
ஆனந்தவீட்டிலே நான்வந்துசேர இந்த

4. ஒருபொறுமைபொய் கோபமில்லாமல்
சோரமுலோபத்துன் மார்க்கங்கல்லாமல்
வேதநெறியை விலக்கில்லாமல்
வேதநாயகா விளம்பஞ்சொல்லாமல். இந்த

---

## 55. இராகம்-கமாஸ்-ரூபகதாளம்.

பல்லவி.

ஏகபராபரனே-கருணைப்பிர
வாகமனோகரனே ஏக

அநுபல்லவி.

தேகமுறும்பல-மோகஉபாதிகள்-யேகவெனக்கு
விவேகமருந்தருள்

சரணங்கள்.

1. சஞ்சலமானேனே-மனம்நொந்து
தளர்ந்துபோனேனே
அஞ்சலெனத்தானே-அடியனை
ஆண்டருள்வாய்கோனே
பஞ்சபூதாதிபிர-பஞ்சமெலாஞ்செய்து
தஞ்சம்செயுங்கிஷ்பிர-பஞ்சப்பொருளான ஏக

2. சங்கடமாற்றுயோ-எளியேன்
தன்முன்தோற்றுயோ
இங்கிதஞ்சாற்றுயோ-தமியனை
யேகரையேற்றுயோ
அங்குமிங்கும்புவி-எங்குமுஉயிரெனத்
தங்குமபடி அருள்-பொங்குங்கருணைகர ஏக

3. நேயர்சகாயனே-அருமலை
நீதிசொல்வாயனே
நாயகிநாயனே-அமரர்கள்
சூழ்சமுதாயனே
மாயவிஷ்யாதி-நோயணுகாமலே
தாயெனவேத நாயகனை ஆளும் ஏக



## 56. இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

கருணைகடாக்ஷஞ் செய்வாயே-சுவாமி. கருணை

அநுபல்லவி.

மருணைசமாகவே மகிழ்வாகநீயே கருணை

சரணங்கள்,

க. அநியாயம் உலகவிர்த்தாந்தம்- இதில்
அழியாதவண்ணம்நீ அருள்வைஉபசாந்தம்
தனிஉன்றனோடுமேகாந்தம்- கொள்ள
சார்வதாகாலமு மெனதுசித்தாந்தம் கருணை

2. நாமரூபகமாம் பிரபஞ்சம்-ஆன்ம
நன்மையை அழிக்கும் எந்நாளும்இதுநஞ்சம்
காமவிஷயாதிகளில் நெஞ்சம்-நாளும்
கலங்கினேனின்பாத கமலமேதஞ்சம் கருணை

3. போதாந்தநிலைமை யுறுதேவ-நல்ல
புவனகோடிகள்செய் தளிக்கின்றகோவே
வேதாந்தரசமொழுகுகாவே-நிதம்
வேதநாயகன் இதபவண்டுவளர்பூவே. கருணை

---

5எ. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா-நல்ல
அற்புதநற்பதப்பெறப் பொற்பதம்எனக்கருள்செய் ஆதி

அநுபல்லவி.

ஓதரும்உயிர்க்குயி ராகிஎங்குநிறையும்
பூதசராசரப்பொருள்கள் எல்லாம்உறையும் ஆதி

சரணங்கள்.

க. ஜீவன்பிழைக்கும்வழி அறியேனே-நான்
தெற்குவடக்கறியாச்சிறியேனே
பாவலகரிகொண்ட வெறியேனே-பந்த
பாசக்களையைவெட்டி எறியேனே
ஆவலுட்டேனெங்கும் அலைந்தகம்வெம்பினேன்
தேவநாயகனே உன் திருவடிநம்பினேன் ஆதி

2. ஐயனேஎனக்கருள் ஊட்டாயோ-கெட்ட
அகங்காரமெனும்பேயை ஓட்டாமோ
உய்யவழியெனக்குக் காட்டாயோ
உள்ளத்தில்உன்பதத்தை நாட்டாயோ
பொய்யுலகநடையைப் பொருளெனநாடினேன்
மெய்யறிவில்லாமலே மிகமிகவோடினேன். ஆதி

3. அண்டங்கள்படைத்தளித் தழிப்போனே-கணம்
ஆகப்பல்கோடிகாலங் கழிப்போனே
தொண்டர்மனத்துயரம் ஒழிப்போனே-நல்லா
சுகமுத்தரோடுகூடிச் செழிப்போனே
அண்டும்வேதநாயகன் அகத்தொளிர்ஜோதியே
மண்டும்வினைகளெல்லா மாற்றுதல்நீதியே. ஆதி

---

## 58. இராகம் பரசு-அடதாளசாப்பு

பல்லவி.

ஜெகநாதா-வினை அகலாதா ஜெக

அநுபல்லவி.

பகலோனென அருள் பவஇருள் நீக்கும் ஜெக

சரணங்கள்.

1. பரிதாபம்பரிதாபம் ஐயாஒன்னில்லை
பஞ்சப்புலாதியர்க் கார்தந்தார் தலைமை
தரைமிசைஎன்செய்கை யாவுமேபுல்லமை
தந்தருளினிஞான சாஸ்திரப்புலமை ஜெக

2. அநுகூலசத்துரு வாகுமென் னுள்ளம்
அநுதினஞ்செய்வதெல்லாம் பெருங்கள்ளம்
தினமுமேபடிந்திடுந் தீவினைப்பள்ளம்
தீர்த்தெனையாட்டுவை திருவருள்வெள்ளம் ஜெக

3. ஈசனே அறநெறி எனக்கென்றும்விலக்கம்
என்பிழைகளை எண்ண இல்லையே இலக்கம்
கூசிப்போனான்மிகக் கொண்டேன்கலக்கம்
குணவேதநாயகக கொடுத்தருள் துலக்கம் ஜெக

---

## 59. இராகம்-மத்தியமாவதி-திரிபுடைதாளம்.

பல்லவி

இரக்கஞ்செய்வாயே-ஐயா என்மேல் இரக்

அநுபல்லவி.

இரக்கஞ்செய்வாயே புரக்கும்என்தாயே
வசமாகிய-யோகபூரண-பாசமேபெற-மோகமே அற இரக்

சரணங்கள்.

1 தேகநிமிர்த்தம் செய்வதனர்த்தம்
யேகப்பிரசித்தம் யேங்கினேன்சித்தம்
இன்பமேவிய நின் பதாம்புய
அன்புதங்கிட துன்பமங்கிட இரக்

2 நானொருமூடன் நாயினுங்கேடன்
ஈனர்கள்சீடன் என்றும்பொய்வேடன்
ஈனமும்அவ மானமுங்கெட
ஞானமுங்கன மோனமுந்தொட இர

3 உலகவியாபாரம் ஓயாவிசாரம்
கலகம் அபாரம் கர்மவிகாரம்
கஷ்டமுங்கன நஷ்டமும்பெறு
துஷ்டனானுன திஷ்டனாகவே இரக்

4 தாசர்கள்நேசா தர்மவிலாசா
பாசவிநாசா பாக்கியப்பிரதேசா
பாதம்மெதொழும் வேதநாயகன்
மீதருள்மற வாதநாதனே இர

---

60 இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

பரனேபக்தர்சுதந் தரனேநாளும்
பக்ஷம்வைத்தென்னை சம்ரக்ஷணைசெய்தருள் பர

அநுபல்லவி.

இரவிகோடியென ஒளிவீசிடும்
யேக அநேக வைபோகநிர்தேக பர

சரணங்கள்.

1 உன்னையல்லால்கதி பின்னையில்லையென்
றுனக்குத்தெரியாதா நாளு
முற்றதன்பிள்ளையைப் பெற்றதாய்தள்ளின்
உலகஞ்சிரியாதா மேகம்
தன்னைப்பயிர்வேண்டு முன்னேஅருமழை
தானேசொறியாதா அந்தத்
தன்மைபோல்நீஉயர் நன்மைஉதவிலென்
தாபமறியாதா

இக்கிலமீதினி லென்னைப்போலேஜடன்
இல்லையேபைங்கிளிச் சொல்லையுற்றாருடன்
மன்னிபோகக்கடல் தன்னில்விழும்விடன்
மாறுமுன்றுறைம் வந்தாளுவதுன்கடன் பா

2 நீவியஅண்டங்கள் மேவிஆகாயத்தில்
நிற்கச்செய்தாய்நீயே எந்தன்
நெஞ்சம்உன் தாளிணைக் கஞ்சம்பதிந்திட
நீவரம்ஈவாயே உனக்
கோவியமோஇது காவியங்கொள்ளரும்
உத்தமஎந்தாயே எனக்
குன்னைத்தருமட்டும் நின்னை அலட்டா
தொழியுமோ என்வாயே
தீவினைநாச னெனப்புகழ்மாலையே
சேர்ந்தஉனக்கென்ன சாந்தர்சண்டேலையே
பாவியென்பாலுண்டு வேலைபல்காலையே
பட்டேன்நொய்விட்டேன் கும்பிட்டேன்உன்காலையே

3 நீதகலும்பஞ்ச பூதம்வளர்சர்வ
சாதகபூமியே வினை
தீர்ந்திடவேஞானக் காந்திசொறியும்
சர்வாந்தரியாமியே என்றும்
வேதநாயகன்மீ தருள்மறவாத
ஸ்வாமியே உண்மை
விளங்கவேபல வளங்கள்சாரும்நிஷ்
களங்கநேமியே
போதனேநீக்காயென் பாதகவெட்டையே
பொய்யுருவாகிய மெய்யெனுங்கட்டையே
நாதனேநீக்குமுன் சாதகநிஷ்டையே
நண்ணிடப்பண்ணுவாய் புண்ணியப்பிரதிஷ்டையே பா

---

61 இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்பராமுகம் ஏதோ-எந்தன்
முன்னம்வந்தாள லொண்ணாதோ இன்

அநுபல்லவி.

தன்னவரைரக்ஷிக்கத் தானேகங்கணமே
தரித்தவனேஎனை ஆதரிக்கல்வங்கணமே இன்

சரணங்கள்.

1 யார்க்கோசொல்லுவதுபோல் நீஅசட்டைசெய்யில்
எப்படித்தொலைப்பேன் என்கன்மக்கட்டை
மார்க்கமுடனே நீ மெய்ஞ்ஞானநிஷ்டைதரும்
மட்டும்நான்விடுவேனோ என்அலட்டை
மூர்க்கவினைகளுக்கு நானொருபையோ
மூடமனமுமாயையும் ஒருகையோ
தீர்க்கமாக உனைநான் அடுத்ததுபொய்யோ
தெய்வமே நீகைவிடில் என்செய்வேன்ஐயோ இன்

2 தீனருக்குதவுவதே தியாகம்-பெருஞ்
செல்வருக்கீவது துர்விநியோகம்
ஞானமுள்ளோர்க்குன் அருள்பிரவாகம் பின்னும்
நலம்அவர்க்கீவதில் என்னுபயோகம்
ஈனனென எனக்கு ஞானசையோகம்
ஈவதுவேநல்ல தியாகப்பிரயோகம்
நானுன்சந்ததி அதிலென்ன சந்தேகம்
நான்விடேன் விடேன் பூர்வார்ஜிதபாகம் இன்

3 பிள்ளைக்குந்தாய்க்கும் உண்டோபிணக்கு-மிகப்
பெருகும்உன் கருணைக் குண்டோகணக்கு
கள்ளமயலுறு மென்மனக்குணக்கு-நீக்கி
கனங்கொள் நன்மார்க்கத்தில் எனையிணக்கு
தள்ளரிதாகிய பரமசத்துவமே
சாக்ஷாதுலகெங்கும் விளங்குந்தத்துவமே
விள்ளரிதாகிய சர்வஞ்ஞத்துவமே
வேதநாயகன்தனக்குரிய சொத்துவமே இன்

62 இராகம்-ஸ்ரீராகம்-அடதாளசாப்பு.

பல்லவி.

வேதநாயகா நம்பினேன்-உனை

அநுபல்லவி.

வாதமும்விபரீதமுங்கெட
நீதமுங்கன போகமுங்கொடு வே

சரணங்கள்.

1 இனமும்உன்பணிவிடையே நான்மறவாமல்
செயஅருள் நன்னடையே
இனமாகும் அருட்கொடையே வழங்கிட
வணின்னமுந்தடையே
கனமுமேல்வர் இனமும்நிர்மல
பணமும்உண்தரி சனமுமேயருள்

2 பொய்வளர்மெய்க்கும்பமே உடையுமுன்
போதிபுண்ணிய யாரம்பமே
தெய்வநிராலம்பமே என்கவிகளைச்
செவிகொண்டு சிரக்கம்பமே
செய்குவாயுளம் வைகுவாயருள்
பெய்குவாய்வினை எய்குவாயுயர் — வேத

3. தயைசெய்யிற்பொல்லாங்கா எந்தனையாளத்
தாமதஞ்செயல்பாங்கா
பயன்உதவிடில்தீங்கா வேதநாயகன்
பரவுங்குணதராங்கா
நம்மும்ஆணவ ஜெயமும்நாளும்-அ
பயமும்பாதபங் கயமுமேயருள் — வேத

---

63. இராகம்—ஆகிரி-ரூபகதாளம்,

பல்லவி.

நாதனே தயைபுரிவாய் எனக்குமெய்ப்
போதமா மழைசொரிவாய் — நாத

அநுபல்லவி.

நீதகல்பரம்பர திவ்யகுணாடம்பர
ஓதருஞ்சுயம்பர உலகமுடன்அம்பர — நாத

சரணங்கள்.

1. நண்ணிநல்வினைகளைப் பண்ணியறிகிலாத
நான்நரன்போலியா இந்த
மண்ணின்மிசை எனக்கும் புண்ணியமென்பதற்கும்
மத்தியில்வேலியா எந்தன்
எண்ணமெல்லாங்கறுப்பே
எனக்குன்னடி வெறுப்பே
பண்ணாதே நீமறுப்பே
பரிந்தாள்வ துன்பொறுப்பே — நாத

2 என்பாட்டில்இரங்காமல் உன்பாட்டிநீசும்மா
இருந்திடில் அதுதகுமா—என்றும்
தன்பால்மகிழ்ந்தோனே இன்பூட்டுங்கதியுன்தன்
தயையின்றிக் கைபுகுமா என்தன்
அன்பெல்லாம் வெறும்பேச்சே
அறமென்பது மேற்பூச்சே
துன்பப்பிரளயம் நீச்சே
தொல்புவியெங்கும் யேச்சே — நாத

3 தினையளவும்நன்னெறி தனையறியாதநான்
தீவினைக்கேயிலக்கா பாரில்
நினையன்றிமற்றெவையும் நினையும்என்னெஞ்சுக்கு
நீமாத்திரம் விலக்கா
நன்மைபுனையும் நீதிப்பிரமான
புவனகொடி நிர்மான
விசயநித்யகல்யாண
வேதநாயகன் பிராண — நாத

---

64 இராசம்-பியாகு-ஆதிதாளம்

பல்லவி.

தஞ்சம்நீயே-தயைபுரிவாயே — தஞ்

அநுபல்லவி.

அஞ்சலென்றேதினம் ஆளுமென்தாயே

சரணங்கள்

1 தினமனவேதை சேர்ந்தநான்பேதை
உனதடிப்போதை உறஅருள்பாதை

2 பாதபஞ்சன பண்டிதரஞ்சன
போதககஞ்சன புண்ணியநிரஞ்சன — தஞ்

3 தருமசிங்காரா சருவசங்காரா
வரும்வேதநாயகன்•பனஅலங்காரா — தஞ்

### 65 இராகம்-பரசு-ஆதிதாளம்.

பல்லவி

நீயேகதியெனக்குன் அருள்கூரே-தந்தை
தாயேநினையல்லது துணையாரே

அநுபல்லவி.

தூயகருணைமழை சொரிகாரே
சொல்அருநலமுறு தலமிசை நிலவென
மலஇருள்செலஅருள் அலரும்உதாரா

சரணங்கள்.

1 முத்தியென்பதெவர்க்குஞ் சமுதாயம்-அது
முத்தர்மட்டுக்கும்என்ப தென்னஞாயம்
நித்தியனைவிடுவேனோ என்தாயம் நீ
நீதியின்படிசெய்குவாய் விதாயம்
சத்தியனேஎதோ உன்அபிப்பிராயம்
தகவென தகமிசை மிகமதிபுகஅரும்
இகபர சுகமருள் அகல்ஜகநாதா

2 வாழுமனோதந்திடில் வேண்டாமே யென்று
மாநிலத்துண்டோ மறுப்பவர்தாமே
ஆழவேநீயெனது மனப்பூமேல்-குடி
ஆகிடின்உனக்கென்ன குறைவாமோ
சூழநீகுடியுறில் வினைபோமே
துதிபுரி விதியினர் கதியினும் நிதிபெற
அதிகயை பதிவுறும் அதிசயயோகா

3 சாதகனேஎன் துயர் தெரியாயோ-நல்ல
சர்வாந்தர்யாமியெனும் பெரியாயோ
பாதகமல்அருள் புரியாயோ-பரி
பக்குவஞானமழை சொரியாயோ
வேதநாயகன்மனந் தரியாயோ
மிடலுறு சுடரவன் உடுபதி தடவரை
கடலிட முடன்இடர் கெடஅடர்தேவா

99 இராகம்-பூபாளம்-ரூபகதாளம்

பல்லவி.

தேவாதிதேவே திருவருள்
செய்தென்னை நீகாவே — தேவா

அநுபல்லவி

ஜீவசம்ரக்ஷணை செய்யுங்கிருபநிதே
தினந்துஷ்டர்கள் இனஞ்சுட்டவர்
முனஞ்சிஷ்டர்கள் மனந்தொட்டவர் — தேவா

சரணங்கள்.

1 பாழுமனமேசுத்த பாஷாணம்-பெரும்
பாபமென்றால் அதற்குக்கலியாணம்
வாழுமின்றொளொழிந்து நிரியாணம்-கிட்டி
வருமுன்னமருள் புண்ணியப்பிரமாணம்
ஏழையென்செய்கையுன்னில் எனக்குவரும்நாணம்
இழைக்குஞ்சுகம் அழைக்குந்தகை
தழைக்கும்படி பிழைக்கும்படி — தேவா

2 அருள்செய்யுன் அலதுன்னைவிடுவேனோ-உனை
அன்றுமற்றோரைக் கும்பிடுவேனோ
மருவுமயலிற்சிக்கிக் கெடுவேனோ-உன்பால்
வழக்கிட்டிரக்கப் பயப்படுவேனோ
மருள்செய்யும்பொருளை நீ வழங்கினுந்தொடுவேனோ
மனந்தந்திடும் அனந்தந்துயர்
முனஞ்சிந்திடு கனந்தங்கிட — தேவா

3 இஷ்டபாலகங்கண தாரணனே-பெரும்
தீயபசாசகண மாரணனே
துஷ்டகண்டன மந்திரோச்சாரணனே-நாளுஞ்
சுயம்பிரகாச நிஷ்காரணனே
இஷ்டன்வேதநாயகன் ஏதவாரணனே
இணங்கண்டர்கள்- கணங்கண்டடி
வணங்கும்படி குணங்கொண்டுயர் — தேவா

67 இராகம்-நீலாம்பரி-ஆதிதாளம்.

பல்லவி

ஏகாதிபரனே-அருள்புரி-யோகாதிதரனே

அநுபல்லவி.

ஆகாமியமுமும் மாகாமியம் அறும்
அசணிதசிற்பர அதிகுணதற்பர
இகபரநற்பத இணைபதப் அற்புத ஏகா

சரணங்கள்.

1 பழிக்குநான்குருபீடம் பத்தனைபோலநான்
பரிப்பது வெளிவேடம்
அழிக்கும்பொய்வாய்ப்பாடம் கொடுமாயைக்கென்
அகமேநடனகூடம்
செழிக்கும்வரங்கள்ஈவாய்
சிந்தையிற்குடியாவாய்
தினகரசுந்தர திருவளர்மந்தா
அனசநிரந்தர அகிலதுரந்தர ஏகாதி

2 படியாக்கொடு நெஞ்சமா ஐயனே-அநா
படருந்தர்க்குண புஞ்சமா
அடியேன் துயர்கொஞ்சமா வரப்பிரசாதம்
அருள்உனக்குப்பஞ்சமா
படியெல்லாம்ஈன்றதாயே
பாரில்நற்கதிநீயே
பரமபவித்திர பதிதஉபத்திர
தருமசமுத்திர சகலவிசித்திர ஏகாதி

3 சுரசேவிதபாதா மலாகித
சுஜநவற்சல்தாதா
வரதநாயகநாதா வேதநாயகன்
மனவாலயகியாதா
நரபரிபாலன நயகுணலாலன
நாகரிகத்துவ நாமமகத்துவ
போசபிரபித்துவ புண்ணியகத்துவ ஏகாதி

68. இராகம்-தன்னியாசி-ரூபகதாளம்

பல்லவி.

நிச்சயம் இதுதானே மதி-நீயருள் கோனே

அநுபல்லவி.

நச்சுமரம்போல நாளும்வளர்ந்தேன்
இச்சகந்தனில் இதயந்தளர்ந்தேன் நிச்சயம்

சரணங்கள்.

1. அல்லும்பகலும் பொருளில்யேக்கம்
அநித்தியசுகங்களே எனநோக்கம்
நல்லவர்சபைஎனக்குநீக்கம்
ஞானவழியில்நாளுந்தூக்கம் நிச்சய

2. துஷ்டர்களுடனே அன்யோன்யம்
துர்க்குணமெல்லாம்சர்வமான்யம்
இஷ்டம்வைப்பதுவே தனதான்யம்
ஈசனே எனக்கறிவசூன்யம் நிச்சய

3. தீதுறும்எனக்குனதுவேதம்
செவிடன்காதில்சங்கநாதம்
வேதநாயகனேஉன்பாதம
விரும்பிவாழ்த்தலே பிரமாதம். நிச்சய

---

69. இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

கருணைசாகரா கனஉபகாரா
காத்தருள்வாய் சோமேவ கருணை

அநுபல்லவி.

அருணோதயமென அடியர்க்குகாட்டும்
ஆத்மகோடிகள் உஜ்ஜீவனஅமுதூட்டும் கருணை

சரணங்கள்.

க. நிச்சயஞானபேரினதுஸ்வாதீனம்
நீதராவிடில்எனக்கேதுமெய்ஞ்ஞானம்
அச்சயமில்லாமலே அபயபிரதானம்
அருள்செய்யின்அடியனுக்கில்லையபமானம் கருணை

2. சிஷ்டன்போல்யாவர்க்குந் திவ்யப்பியசங்கம்
செய்வதில்லையெனைப்போலவர்சிங்கம்
சட்டமாய்நடப்பதே சர்வவில்லங்கம்
சாமிநீஅறியாயோ தமியன்அந்தரங்கம் — கருணை

3. எத்தனையோசெய்தேன் உனக்கபராதம்
இருக்கித்தம்உனக் கென்மேல்விரோதம்
அத்தனேபிழைபொறுத் தாள்வதேநீதம்
அருள்புரியஇனி வேண்டாம்விகாதம்

4. தலைவன்இல்லாவிடில் தழைக்குமோராஜ்யம்
தரையிலேநீயல்லாமல் சகலமும்பூஜ்யம்
விலகிடாதருள்உயர் விமலசாம்பிராஜ்யம்
வேதநாயகன்இன்னந் தான்என்னவியாஜ்யம். — கருணை

---

௭0. இராகம்-தோடி-ஏகதாளம்.

பல்லவி.

தயைபுரியஇன்னந் தாமசமேது — தயை

அநுபல்லவி.

பயநிவாரண பாக்கியபூரண
உயரும்ஆரண உலககாரண — தயை

சரணங்கள்

1. அத்தனேஒருசாணகியகுக்ஷிக்
காககநான்ஊரெல்லாம் அலைந்திடும்பக்ஷி
நித்தமும்பேசவேன் ஆயிரங்கக்ஷி
நீதிநெறியில்நானிரக்ஷரகுக்ஷி — தயை

2. தத்துவஞானத்தைத் தள்ளியேபோட்டேன்
சாமிநான்இந்திரிய வாசலைப்பூட்டேன்
உத்தமம்எனக்கருள் பலதரங்கேட்டேன்
உதவிசெய்யாவிடில் உனைவிடமாட்டேன் — தயை

3. சர்வவிநோத விசித்திரநிர்மாண
சாசவதமங்கள சத்தகல்யாண
பரமநித்தியானந்த பாக்கியஉக்கிராண
பாலவேத நாயகபிரமாண. — தயை

எ௧. முகாரி-ரூபகதாளம்.

பல்லவி.

காத்தருள்வாய் எனைக்-காத்தருள்வாய்

அநுபல்லவி,

சாஸ்திரம்வேதம் ஸ்தோத்திரமேசெய்யப்
பாத்திரனேதயை நேத்திரனேதினம் காத்த

சரணங்கள்.

1. ஆறுஜைய்என்பாபம் அநியாயம்அநியாயம்
ஞானியைப்போல்நான்காட்டும் நடையேமுழுமாயம்
சனமுநாந்தமகுணங்கள் என்தனக்கேகந்தாயம்
தினமென்மேல்நீகோபஞ் செய்யிலென்னஆதாயம் காத்த

2. மாதாநீஉன்மகனென் மன்னவனீகுடிநானே
தாதாநீயாசகனென் ஸ்வாமிநீஅடியேனே
சாதகஞ்செய்தற்குருநீ நம்பியென்சிஷன்தானே
ஆதாரமாகஉனை அடுத்தவர்க்கென்சுரர்கோனே காத்த

3. வாக்குமனம்எட்டாத வாசாமகோசரனே
பாககியபலதான பரிபாலபரமேசுரனே
தேக்குமலவிருள்நாசஞ் செயும்உதயபாஸ்கரனே
ஆக்கும்வேதநாயகனுக் கிரகதயாபரனே. காத்தருள்

---

எ2. இராகம்-தோடி-ரூபகம்.

பல்லவி.

வாவாஜகநாதா-வாவாசுகநாதா வாவா

அநுபல்லவி.

பாங்களை நிர்மூலமாக்கப்
பரமார்த்தங்கள் கொடுத்துக்காக வாவா

சரணங்கள்.

2. தர்மாதர்மந்தெரியேன்-ஜெப
தபசாதிகள் புரியேன்
கர்மம்அநுசரியேன் உனைக்
கண்டால் இனிப்பிரியேன் வாவா

2. எனைவிடலாமா பல
இடர்படலாமா
வினையேதொடலாமா-ஏழை
வீணேகெடலாமா — வாவா

3. வர்மஞ்செய்தல்முறையா என்தன்
வாழ்நாள்வளர் பிறையா
தர்மக்கரிக்குறையா இன்னஞ்
சலஞ்சாதிக்கல் பொறையா — வாவா

4. ஆலோலிதமுகனே-நித்திய
அமலானந்த சுகனே
மேலோர்கள் சமுகனே-துய்ய
மிகும்வேதநாயகனே- — வாவா

---

73. இராகம்-சஹானா-ஆதிதாளம்.

பல்லவி.

கருணைசெய்யவேண்டுமே சுவாமி — கருணை

அநுபல்லவி.

சரணாகதியென உனையடைந்தேனே
சாதகம்வேண்டியே உனைத்தொடர்ந்தேனே — கருணை

சரணங்கள்.

1. மாயவாழ்வெனும் பெருவாரிதிச்சுழலே
மாட்டியே அலைபடும் நாயொருவிழலே
காயமாகிநிற் காற்றறைகுழலே
கழியும்போதுநற் கதிமலர்கழலே — கருணை

2. சலத்தையல்லாது தாமரைக்கண்டேனிலையே
கரையில்லாளொருப்பயிர் எடுக்குமோ தலையே
நிலத்திலேயல்லால் நிலையெனக்கிலையே
நிழற்பார்க்கநுன் நிரஞ்சனபாலையே — கருணை

3. சந்திரசூரியர் உள்ளமட்டும்வாழ்நாளா
சாவையேஜெயித்திட என்னையில்வாளா
தந்தையேஉனது சோதனைக்குநான் ஆளா
சர்வசாதக பரமதயாளா — கருணை

4. அகணிதகுண அகலாண்டவிசாலா
அபரிமிதானந்த தரபரமேசா
விகசகிருபாகா விமலப்பிரகாசா
வேதநாயகன் இதயநிவேசா — கருணை

---

### 74. இ-ம்-ஈ சமனோகரி-ரூபகதாளம்

பல்லவி.

அபயம்நீயருளுவாய்-ஆதியே-அநுதினம் — அபயம்

அநுபல்லவி.

உபயபாதம் நம்பினேன்-ஓ அநாதியே-அநுதினம். — அபயம்

சரணங்கள்

1. அலைகடற்சிறுதுரும்புபோல அலைந்துவாடினேன்
உலைமெழுகெனஉள்ளமுருகி உன்னைநாடினேன்-தினமும் அ
2. நீர்குமிழியைநிகரும் வாழ்வைநிலையென்றெண்ணினேன்
மூர்க்கமாககொடியபாவமுழுதும்பண்ணினேன்-தினமும் அ
3. பாசக்காற்றிற்பஞ்சுபோலப் பறந்துதயங்கினேன்
ஆசைக்கடலில்மூழ்கிமூழ்கி அறிவுமயங்கினேன்-தினமும். அ
4. ஆண்டவனீ அடிமைநான் எனைஆளவொண்ணுதோ
நீண்டஉலகம்நீழையென்றெனைநிந்தைபண்ணுதே-தினமும்
5. புவனரக்ஷணகரரணார்த்த புருஷவேஷனே
பவவிமோசனவேதநாயக பலவிசேஷனே-தினமும். அப

---

### 75. இராகம்-பியாகடை-ஆதிதாளம்

பல்லவி.

ஏதோசோதனை- இன்னம்என்சாதனை
ஏகாதிபதியே-நிதியே எளியேன்மேல். — ஏதோ

அநுபல்லவி.

போதோதயசுர பூஜிதபாதா
பூதபேத காரணசுககாதா — ஏதோ

1. தக்கைதாயோடு பலதினமுறையெடுத்தாய்
தாரங்கள் பலவர்க்குச் சுகவதங்கொடுத்தாய்
சொந்தமாயுடற் சுகத்தினைக் கெடுத்தாய்
ஸ்வாமிதீயிக்க வாறுமைபிடித்தாய். ஏதோ

2. ஒருகையால் அடிப்பாய் ஒருகையாற்பிடிப்பாய்
உதவியில்லாமலே உன்னெண்ணமுடிப்பாய்
பெருமலைகளையுமே பிடுங்கிப்பற்கடிப்பாய்
பிரமாண்டங்களைப் பிளந்திட இடிப்பாய். ஏதோ

3. துன்பஞ்செய்வதுபோல் சாபங்களைக்கொடுப்பாய்
துஷ்டர்கள்மீதில் எப்போதுங்கையெடுப்பாய்
அன்புள்ள தாயைப்போல் அடியரை அடிப்பாய்
அவர்களைத்தூயாறு காமலேதடுப்பாய். ஏதோ

4. ஆறுல அக்ஷா குரு பரநரவேஷா
அமிர்தவருஷ தூல்லியமிருதுபாஷா
விதுரநிர்தோஷாநிர்விகற்பவிசேஷா
வேதநாயகவந்திதகுணபூஷா. ஏதோ

---

76. இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதுபராமுகம்-ஏழையென்மீது
ஏகனே-யோகனே-பாசன-தியாகனே.

அநுபல்லவி.

வேதபோதக அநாதரக்ஷணனே
மேசவாகன செய்விகலக்ஷணனே ஏது

சரணங்கள்.

1. அநித்தியசுகந்தாய் அதைநான்கேட்டேனே
ஆனந்தத்தரில் அனுபவிக்கமாட்டேனே
இனித்த உன்பாதத்தில் இதயம்நாட்டேனே
ஊனமாயையை எதிர்த்துவாட்டேனே. ஏது

2. ஐயனே என்னைக் கேளாமல்முன்னீயே
அரியமானிடஜன்மம் தந்தாயே
வையாமூதூநான் உனக்கொருசேமம
மதியருள்வாய்பெற்று வளர்த்திடும்தாயே.

3. முந்திபலருக்குக் காட்டினுபுனையே
முத்தர்க்குக்கொடுத்தனை மோக்ஷமாமனையே
பந்தியிலாகும்மா ஓரவஞ்சனையே
பக்ஷமாயெனக்கருள் பரசுகந்தனையே. ஏது

4. அடகநாகடன சமர்த்தியம்பிரதாபா
அசலசுஜநவாற் சல்லியநிஷ்கோபா
சகலசுலக்ஷண தத்துவசொரூபா
தாசன்வேதநாயகன் மனோதீபா ஏது

---

77. இராகம்-கமாஸ் ஆதிதாளம்.

பல்லவி.

ஆரணமயநயபூரணனே
உன்தமலஅடிசரணம். ஆரண

அநுபல்லவி.

பாரகோரபரி காரகுணாகர
வீரதீரஉபகாரமனோகர. ஆரண

சரணங்கள்.

1. உனைநிதம்நினைவுறும்எனை அடர்வினை அகலாதநாதா
உலககலகமயல்விலகஇலகருளை நீதா
கனஉலகஜநகஅந்நதிநகரமெய்
காவலா-அடியிர-ஆவலா அருள்செய். ஆரண

2. துரிதரஹிதகுணசரிதசுகிர்தபரமேசா-நேசா
சுஜனபஜனமிர்துவசனரசனஇதிகாச
சரதவரதஅனவரதவிரததர
சாபமோசனபிர-தாபவிலாசன. ஆரண

3. கனககனபுவனபவனகவனபரிபாலா-மூலா
கரணசரணகுணகிரணபரண அநுகூலா
விநயநிலயஸ்வபவிஜயமய அபய
வேதநாயகன்மனோதய அதிசய. ஆரண

78. இராகம்-ரீதிகௌளை-ரூபகதாளம்.

பல்லவி.

சரணஞ்சர்வேசா-எனைரக்ஷிக்கத்
தருணமிதுபிரகாசா. சரணஞ்

அநுபல்லவி.

சருஞானலயபர காயப்பிரவாசா
மாயசுகோதய பாபவிநாசா சரணஞ்

சரணங்கள்.

க. நீயேகுருமூர்த்தி உனக்குச்சிறு
நாயேன்வித்தியார்த்தி
தூயாஉபதேசஞ்சொல்லிஇஃதிபூர்த்தி
யாயிற்குருசிஷர் இருவர்க்குங்கீர்த்தி. சரணம்

2. நீதான்பரஞ்சோதி-எனஉலகின்
மீதேபெருங்கியாதி
வேதாமல்விருள் விலக்குதல்நீதி
ஆதாரமாக உன்னருளைப்பிரசாதி. சரணம்

3. ஆதிகாரணநாதா-பரமஞான
ஜோதிமயஅபேதா
பாதகமோசன பாக்கியப்பிரசாதா
நீதவேதநாயக நித்தியசங்கீதா சரணம்

79. இராகம்-லலிதை-ரூபகதாளம்.

பல்லவி.

இன்னந்தாமசம்ஏது கஜநாதா. இன்னந்

அநுபல்லவி.

நன்னயமதாக உனை-நம்பினவனான் அலவோ. இன்னந்

சரணங்கள்.

1. சிலம்அருளிற் செலவோ
சேயுனக்குநான் அலவோ
மேலுமென்னதான் சொலவோ
வேலையுனக்குப் பலவோ. இன்னந்

2. சாதுஜனரக்ஷணனே
தாசர்கள் பிரதக்ஷணனே
கீதாமிர்த பக்ஷணனே
கீர்த்திகொள் சுலக்ஷணனே — இன்னங்

3. ஈசனே நான்உன்னடிமை
உப்பொருளும் உன்னுடைமை
நேசமுடன் என்மடமை
நீக்கிடுவ துன்கடமை. — இன்னங்

4. சாதககுணபரணே
சர்வபுவநாதரணே
வேதநாயகன் ஸ்மரணே
வேகதுரிதஹரணே

---

80. இராமம்-கெங்காதரங்கணி-ஆதிதாளம்

பல்லவி

உனைநானே-தொழுவரம்-அருள்கோனே — உனை

அநுபல்லவி.

விநயசுஜனசேவிதபெருமானே
வேதமுடியில்நடனம்புரிவோனே. — உனை

சரணங்கள்.

க. சிந்தைமீஅனதுபாதமேதியானம்
செய்யநீயருள்வாய்திவ்யஞானம்
தந்தைதநீயறிபுமேசமவஸ்தானம்
தயனஞ்மீதில்லையோஅபிமானம். — உனை

2. ஈசனேஎனது வார்த்தைகள்பொய்யே
இந்தவார்த்தையொன்று மாத்திரமெய்யே
பாசமூடுமனம்வெயிலுறுநெய்யே
பாவம்நீங்கும்படி நீதயைசெய்யே — உனை

3. அடருமலசலாதிகள் நிறைபேழை
ஆணமாய உடலாகியபாழை
திடமென்றெண்ணிநிறைப்பேன் அதிற்கூழை
சினஞ்செய்யாதே நான்மிகஏழை. — உனை

4. சகலலோகம் அடங்காதுயர்காத்ரா
சமமிலாக்கபட நாடகசூத்ரா
சுகப்பிரதாயக கிருபாகரநேத்ரா
துதிசெய்வேத நாயகன்மனஞேத்ரா: உனை



8க. இ-ம் பூரிகல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

கருணைசாமூர்த்தி-காப்பதுவேகீர்த்தி

அநுபல்லவி.

அருணோதயமாசரீர
அற்புதநராவதார. கருணை

சரணங்கள்.

க, தேகம்வளர்ப்பதே யென்விர்த்தி
தினந்தூர்க்குணமே பிரவர்த்தி
ஏகமானசர்க்ரவர்த்தி
எனக்குநீஅருள் பாபநிவர்த்தி. கருணை

2. அற்பமானபோக போக்கியம்
அழிந்துபோம் இதுவேதவாக்கியம்
தற்பராநினைக்காணும் பாக்கியம்
தந்திடில்அதுசர்வ சிலாக்கியம். கருணை

3. பரகந்தனைச்சர்வ நாசம்
பண்ணுவதில்உண்டோபிரயாசம்
வேதநாயகாநின் னேசம்
விளங்கிட அருள் வாய்பிரகாசம்

---

82: இராகம்-பரசு-திரிபுடைதாளம்,

பல்லவி.

சித்தம்எப்படியோ-ஐயா-நின் சித்தம்எப்படியோ.

அநுபல்லவி.

உத்தமறுகளன்னைஉயர்த்திடுவாயோ
கர்த்தனேநீயென்னைக்கைவிடுவாயோ சித்தம்

சரணங்கள்.

க. அருள்புரிவாயோ-அருந்தவப்
பொருள்சொரிவாயோ
தருமவாறும்படி தான்தெரிவாயோ
இருள்மூடும்பாவியென் றென்னைப்பிறவாயோ। சித்தம்

2. பாதம்சேர்ப்பாயோ-என்தன்மனக்
கேதந்தீர்ப்பாயோ
ஆதன்செய்வினை அடியோமைப்பார்ப்பாயோ
ஏதுங்கதிஇல்லானென் றிரங்கிபாரப்பாயோ சித்தம்

3. வாடிநொந்தேனே மெய்ஞ்ஞானக்கன்
மூடிநைந்தேனே
நாடியாள்வாயென்று நம்பிவந்தேனே
பாடும்வேதநாயகன் பருகுஞ்செந்தேனே சித்தம்

---

83- இ-ம்-சஹானா-அடதாளசாப்பு.

பல்லவி.

எப்படியும்பரமே-நலம்பற
ஈந்தருள்வாய்வரமே.

அநுபல்லவி.

செப்பருமாணிக்க தீபசொரூபனே
தேவேமனமேநொந்தேன்-காவேயெனமேவந்தேன். எப்

சரணங்கள்.

1. கேவலம்வாடினேன் கேள்விமுறையில்லையோ-என்தன்
சீவன்பிழைக்கச்செய்ய வல்லனீயல்லையோ
பாவனாளனைம் பண்ணுதல்பாரமோ
பாகேகளியேசத்தே-ஏகோதனியேவித்தே எப்

2. அற்பன்ஆனாலும் அன்னைக்குப்பிள்ளை அல்லவோ
பற்பலவாபடித்துப்படித்துச்சொல்லவோ
கற்பகோடிகாலங்கண்டுமுடிவில்லாக்
கண்ணேமணியேபொன்னே
விண்ணேஅணியேசொன்னேன். எப்

3. இன்பதுன்பங்கள்இரண்டிற்சமசித்தமே-தந்து
நின்பதசேவைதனிலிக்கச் செய்வாய்நித்தமே
அன்பன்வேதநாயகன் அகத்தேயணி
ஆணிப்பொருளேமுத்தே காணப்பருவோர்சொத்தே. எப்

---

### 81. இராகம் கலியாணி. அடதாளசாப்பு.

பல்லவி.

உன்னையெனக்குக்காட்டையா-காட்டாமல்சும்மா
ஒளித்தென்னவிளையாட்டையா.

அநுபல்லவி.

தன்னைப்பாராமலே தன்பிள்ளைகளழுமடி
தனம்ஊட்டுந்தாயுண்டோசாமிநீதயைகூடி. உன்னை

சரணங்கள்.

1. கறவைதனைப்பிரிந்த கன்றுகதறல்போலும்
கணவன்தனைப்பிரிந்து கலங்கும்உத்தமிபோலும்
இறகுகளபறிகொடுத் தேங்கும்பறவைபோலும்
இருகண்ணுந்தெரியாத ஈனக்குருடர்போலும்
ஏங்கினேன்சுகம் நீங்கினேன்துயர் உன்னை

2. நினைக்கநினைக்கவென்றனெஞ்சமெல்லாம்ருசிக்கும்
நினைப்புகழும்வாயே நித்தியமிர்தம்புசிக்கும்
கனக்கும்நின்னடிகாணக் கண்கள்தினம்பசிக்கும்
கர்த்தனேஉனைக்காணா கவலையெல்லாம்நசிக்கும்
கனத்திலேனுங்கனத்திலேனுமென்
மனத்திலேனுஞ்சொப்பனத்திலேனுநீ உன்னை

3. விண்ணோர்நினையல்லாமல் வேறொன்றைத்தொடுவேனோ
மேதினியெங்குந்தேடி வேதனைபடுவேனோ
கண்ணேமணியேநினைக் கண்டால்நான்விடுவேனோ
கட்டிக்கொண்டானந்தங் கலக்கப்பின்னிடுவேனோ
கருத்தில்மூடுவன்-வருத்தம்போடுவன்
திருச்சாடுவன்-விருத்தம்பாடுவன். உன்னை

4. தேவனேஉன்னைகண்டால் திட்டிதோஷந்தொடுமோ
இவ்வுடே ஜோமயம் என்தேகந்தனைச்சுடுமோ
கூவுங்கோழிமிதித்தாற் குஞ்சுமுடம்படுமோ
கொல்லுஞ்சிங்கமானாலுங் குட்டிகள் அஞ்சிடுமோ
கோலனே அநு-கூலனேபரி
பாலனேகன-மூலனேநீ. உன்னை

5. ஆணல்லபெண்ணல்ல ஐம்புதஞ்சுடரல்ல
அரியயன்சிவனல்ல அதுவல்லஇதுவல்ல
காணருமுன்திவ்ய காந்திவிரியுநல்ல
கனவடிவினைக்காணக் காதல்கொண்டேனல்லை
காரணசுக-பூரணகுண
தாரண-கன-ஆரணநீ. உன்னை

6. தேனேகனியேதெவிட் டாததெள்ளமிர்தமே
இனிகேகரும்பே தித்திக்கும்இரதமே
வானேபுவியேசுக வாழ்வேபெரும்பதமே
மதிக்கும்வேதநாயகன் மகிழுமனோதரமே
வாடினேன்கவி-பாடினேன் உனை
நாடினேன் தினந்-தேடினேனே-நீ. உன்னை

---

85. இராகம்-பங்காளா-ஆதிதாளம்.

பல்லவி.

சஞ்சலமாய்நெஞ்சமிக உடைந்தேனே-இனித்
தஞ்சமெனஉன்சரணம் அடைந்தேனேஸ்வாமி. சஞ்ச

அநுபல்லவி.

வஞ்சகப்பிர பஞ்சமெனும்
நஞ்சிந்து மூழ்கியே, சஞ்சல

சரணங்கள்.

1. இட்டவலைபட்டயரும்மான்போலே-வெயில்
சுட்டசலம்வெட்டகலும் மீன்போலே-ஸ்வாமி. சஞ்சல

2. பொய்யுலகமெய்யெனவே தடுமாறி-நாளும்
ஐயகோகோமையலெனுங் கடுமீறி-ஸ்வாமி சஞ்சல

87, இராகம்-தேவமனோஹரி-ஏகதாளம்.

பல்லவி.

இன்னமுந்தாமதமேன்-என்சுவாமி. இன்ன

அநுபல்லவி.

உன்னதமாகிய துரியாதீதா
உலகாதிசர்வ காரணபூதா இன்ன

சரணங்கள்

1. மழைமுகங்காணும் பயிர்போல்வாடி
மாதாதனைவிட்ட சேய்போலோடி
தழைசிம்உன்குண சரித்திரந்தன்னைப்பாடி
சாமிநானுனையடைந் தேன்கதிதேடி. இன்ன

2. பத்தனைபோலநான் போடுவேன்வெளிச்சம்
பாவத்தின்கடனுக்கு நாணொருமச்சம்
அத்தனேமுனியாதேகொண்டேன்அச்சம்
அருவினைபோக்கிநீ அருள்வாய்ஸ்வச்சம். இன்ன

3. அரசேநீயெனைக் கைவிடலாமா
அருளேசெயில் உன்கைப்பொருளேபோமா
திருவரம்மாயா விடில்வினைசாமா
தேவமனோகர திவ்யசோமா இன்ன

4. அனவரதசுகாத ஆத்மசொரூபா
அனந்தகல்யாணகுண அனேகப்பிரதாபா
தினகரதினகர றேகியதீபா
சத்யவேதாந்தகமா இருதயசல்லாபா. இன்ன

---

88. இராகம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி

உன்னைத்தவிர வேறென்னைத்தாங்கிடப்
பின்னைத்துணையில்லை மன்னர்க்கரசே. உன்னை

அநுபல்லவி.

அன்னைக்கிணையாகிய கனபிரபுவே
உன்னற்கரிதாகிய மாவிபுவே, உன்னை

சரணங்கள்.

1. நீமுகம்பார்த்திடில் அணுவும்பர்வதமே
நீமுனிந்தால்பெருமலைகளும் அதமே
தாமதிப்பீசெயிற் பிழைப்பதெவ்விதமே
தயைநீபுரிய இச்சமயம்உசிதமே — உன்னை

2. நீரா டுத்தவர்க்கிலை ஜலகஷ்டம்
நின்னை அடுத்தவர்க் குண்டோ அதிர்ஷ்டம்
ஆரையடுக்கினும் உண்டோ அதிர்ஷ்டம்
ஐயாநினக்கன்பனாக என்னிஷ்டம். — உன்னை

3. ஊரார்மெச்சிடப்பாடுவேன்பாட்டு
உன்புகழ்பாடவென்றால் வாய்ப்பூட்டு
சீராகியபெரியோர் சபைதீட்டு
தீயோருடன்எனைக் கணுதினங்கூட்டு. — உன்னை

4. ஆதிமத்தியாந்த அபாவப்பிரகாரா
அண்டசராசர அகிலாதாரா
பூதநிர்மாண நிர்வாகசங்காரா
போதவேதநாயக புண்ணியசரீரா. — உன்னை

---

89, இராகம்-சுத்தசாவேரி-ஆதிதாளம்,

பல்லவி

நானே உன்னை நம்பினேனே-நலம்
தானே அருள் கணவானே. — நானே

அநுபல்லவி.

வானோனெனச்சுகத் தேனே பொழிந்திடும்
மன்னுயிர-சன்னுதினம்-என்னுவுறும்-முன்னுவிதம். — நா

சரணங்கள்.

1. காயம்பலதுவாரக் கந்தல்-அதைக்
காக்கநான் போடுவேன் வாய்ப்பந்தல்
மாயவலைபிறபட்டு மதியுங்விதியுங்கெட்டு
பந்தினை-கொண்டுமிக-அண்டுதய-குண்டுதினம். — நா

2. அருணகோடிப்பிரகாசகாத்திரா-அதி
அற்புதவேதாகம சாஸ்திரா
கருணாநந்தநேத்திரா கனபக்தஜனஸ்தோத்திரா
காப்பதேமுகம்பார்ப்பாய்வினை-தீர்ப்பாய்அடி-சேர்ப்பாய்நிதம். கா

3. விபுதகணவந்திதச் சரணா-நாளும்
வேதநாயகன் அந்தக்கரணா
சுபமங்களதரணா சுஜநகுலாதரணா
துயாகண-நேயாபுனித். தாரான சகாயாநிதம். காணே

---

90, இராகம்-சஹானா-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவேளைவந்துன் அருள் தந்தருளுவாய் இந்த

அநுபல்லவி

வந்தனை நிரந்தரம் புரிந்தேன்ஐயனே, இந்த.

சரணங்கள்.

1. அன்னைபிதாஉன்னையன்றிப் பின்னையாரையா
என்னைநிதந்தின்னும்வினை தன்னைத்தீரையா
பின்னுநின்றபொன்னுலகந் தன்னில்வாழ்மெய்யா, இந்த

2, பூதலத்தில்ஆதரவுன் பாதஇணையே
பேதகமாயேதுனக்கிங் கோதஇணையே
தீதகலுஞ்சாதகர்கக பேததுணையே. இந்த

3. நீயெனெஞ்சில் தூயஅறந்தோயஇலையே
மாயையெனும்பேய்செய் அய்யாயமலையே
நேயன்வேதநாயகனுக் காயநிலையே, இந்த

---

91, இராகம்-சாமந்தா-ஆதிதாளம்.

பல்லவி.

மெய்ஞ்ஞானங் கொடுப்பாய்-ஸ்வாமி
அஞ்ஞானந்தடுப்பாய்-ஸ்வாமி, மெய்

அநுபல்லவி.

பொய்ஞ்ஞானியர் அல்லாற்மேற்கருணை
பூண்டவனேஎன் ஆண்டவனே, மெய்

சரணங்கள்.

1. ஆஸ்திகள்பாஸ்திகள் யாவையும்வென்டேன்
அநித்தியப்பொருள்மீ அருளிலுக்கீண்டேன்
சாஸ்திரம்சொல்லுமவழி இனித்தாண்டேன்
கருவெனநீண்டேன திருமடி பூண்டேன். மெய்

2. அகமேகட்டுக் கடங்காக்காளை
ஐயோவினே அழித்ததுநாளை
இகமேலேநம்பினேன்மலர்த்தாளை
என்னவோநாளை-இதுநல்லவேளை. மெய்

3. அந்நியர்க்குரைப்பேனுன் உபதேசம்
அடியேன்செய்கைகளோ ஆபாசம்
என்னசொல்வேன்நான் இதயப்பசாசம்
இதற்குன்மேல்நேசம்-இல்லைவலேசம். மெய்

4. அத்தனேஎளியர்க் கன்னமும்ஊட்டேன்
அறத்தைக்குச் சுண்ணாம்புமேகீட்டேன்
உத்தமமார்க்கத்தில் உள்ளத்தைநாட்டேனா
உனைவரங்கேட்டேன்இனிவிடமாட்டேன்; மெய்

5. அவன்அவள் அதுவென அடங்காமூலா
அடங்காதீத அம்பரவிசாலா
சிவமுமுவேத நாயகன் அநுகூலா
ஜெயபரிபாலா-சுகமுநசீலா மெய்

---

92. இராகம்-பரஜ-ஆதிதாளம்.

பல்லவி.

தேவாதிதேவபல ஜீவாதிகாரணா-உன்
சேவடியைநம்பினேன்-ம தேவாதி

அநுபல்லவி.

காவாரநானேபல் தேவாரம்பாடவே
[illegible]-வரம் நீத-[illegible]. தேவாதி

சரணங்கள்.

1. அகஇருள்மூடினேன் மிகமிகவாடினேன்
அஞ்சாதேயென்று சொல்லி ஆளொண்ணாதோ
இகபரம்நாடினேன் சுகநிலைதேடினேன்
என்மேல்இரக்கம் உனக்கேதண்ணாதோ
பகவானேநீயெனது முகம்நோக்கியேதயை
பண்ணியருள் புண்ணியர்தொழும். தேவாதி

2. அன்னையும்பிதாவும்நீ ஆவியும்உடலும்நீ
ஆசாரியன்கடவுள் யாவும்நீயே
முன்னும்நீபின்னும்நீ முத்திசித்திநீ
மூலாதிகாரணமும் மூர்த்தியேநீயே
நின்னேசவாரியில் நான்எந்நேரமும்படிய
நித்தியம்பல சித்தியருள். தேவாதி

3. ஏழைநான்அல்லவோ என்னதான்சொல்லவோ
ஈசாஎன்மீது தயைஎன்றுவாயோ
பாழுடலெடுத்திழைனேன் தாழுமனம்வெம்பினேன்
பாசாந்தகாரம் அறப்பண்ணுவாரே
சூழும்அடியார்கள்மனம் வாழும்வேதநாயகா
சுத்தமுறு சித்தம்அருள். தேவாதி



93, இராகம்-பலஹம்சா-ஆதிதாளம்,

பல்லவி.

ஞானமார்க்கம் நானேசேர
நல்வரம் அருளையனே

அநுபல்லவி,

ஈனஅசேதன இருள்வழிநீங்கத்
தானமுமோனமுந் தர்மமும்ஓங்க, ஞான

சரணங்கள்.

1. நீசனானாலும்உன்தாசனான் அலவோ
நின்னைஅல்லால்தெய்வம் இன்னமும்பலவோ
ஈசனேஎன்குறை எவரிடஞ்சொல்லவோ
என்மொழிகாட்டிலே எரித்திடுநிலவோ, ஞான

2. கர்த்தனைஒழியாக் கவலைப்பிரபஞ்சங்
கண்ணியிற்பறவைபோற் கலங்கினேன்நெஞ்சம்
உத்தமகுணாந்தா உனக்குண்டோபஞ்சம்
உன்னையல்லால்இனி வேறில்லைதஞ்சம் — ஞான

3. அமரர்நரர்சோபன அமிர்தகடாக்ஷணனே
அனந்தபேதக ஜீவாத்வரக்ஷணனே
சமரசஞானசற் குணசுலக்ஷணனே
தாசன்வேதநாயகன் பிரதக்ஷணனே.

---

94. இராகம்-சஹானு-ரூபகதாளம்.

பல்லவி.

உதவிசெய்யலாகாதா-ஓ-ஜகநாதா.

அநுபல்லவி.

நிதநிதம்உனதிணையடிகளை
நெஞ்சில்நினைத்திடவரம்பீ. — உதவி

சரணங்கள்.

1. அடியேன்துயர் படவேதகுமா
சுடமுன் இருள் தானொடுங்குமா
கொடிதாகிய வினையால்நிலை
குலைந்தேன்-மனம்-மலைந்தேன். — உதவி

2. மனைவாழ்வுறு துயர்தான்மலையே
உனையல்லது கதிவேறிலையே
அன்னையேகொடு வினையாலமனம்
அயர்ந்தேன்-தினம்-பயந்தேன். — உதவி

3. சுரசேவித பரமேசுரனே
நரபோஷக கருணாகரனே
வரவேத நாயகனேகுண
வரனே-பரம்-பரனே. — உதவி

---

95 இராகம்-சாளங்கபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைமறவாமல் எனக்கருள்வரமே
பரமே சுகபரமே

அநுபல்லவி.

பொன்னைநாடௌிியர்போலும் எக்காலம்
அன்னைதன்னைமறவாப்பிள்ளைபோலும் உன்

சரணங்கள்

1 மங்களமாகப்பெருவாழ்வுவந்தாலும்
சங்கடமுடன்கன வாழ்வுவந்தாலும் உன்

2 பூமண்டலம்எங்கும் புகழ்ச்சிவந்தாலும்
ஈமங்கொள்மாலையென யிகழ்ச்சிவந்தாலும் உன்

3 மகிழ்உறவேவெகுமானம்வந்தாலும்
இகழுறவேகன ஈனம்வந்தாலும் உன்

4 தலைகீழாகஇத்தரையுரண்டாலும்
அலைகடல்பெயர்ந்ததன்கரைபுரண்டாலும் உன்

5 அருமையாகியசதானந்தநிலையே
மருவும்வேதநாயகன்மகிழ்கலையே உன்

96 இராகம்—கண்டா—ஆதிதாளம்.

பல்லவி

வாவாவாதேவே வந்தெனைக்
காவாயேகோவே

அநுபல்லவி.

காவார்பூவே கலையோர்பாவே
ஓஓவேதாவே

சரணங்கள்.

1 வனவேடன்வலையே—மாட்டி-மனநோயுறுங்கலையே
எனவேதுயரலையே-சாந்தனை-இடர்யாவுந்தொலையே
வனமார்நிலையே மதியோர்கலையே
கனமார்குணமலையே

2 உடல்விழுந்திடுமே பரமே உனையே அநுதினமே
திடமாவண்மனமே நினைந்தறம் செயமே அருள்கனமே
அடியார்தனமே அயலார்சினமே
படியார்தனக்கினமே வாவா

3 நினையாஎன்மதியே உடல் நிதமும்செய்சதியே
வினைதீர் இதுகதியே பரவும் வேதநாயகன்நிதியே
அனைவோர்திதியே அருவாரிதியே
தனைநேர்பாகதியே வாவா

---

97 இராகம்-உசேனி-ஏகதாளம்

பல்லவி.

தருணம்ஈதையா இக்கால ஹரணம்ஏதையா

அநுபல்லவி,

கருணையால்உலகனைத்துந் தாங்கும்பகாரா-தீரா-உதாரா
காணும்பிரபஞ்சம் தனிற்சிக்கிக்
கோதும்என்னெஞ்சம் அநுதினம்
பேணும்பொய்வஞ்சகம் இனிஉன்தன்
மாணடிதஞ்சம் எனைத்தொடர்
கருமந்தனையேநீக்க தருமந்தனைநிலையாக்க தருண

சரணங்கள்.

1 ஆண்டான்அடிமையை வேண்டாமெனத்தள்ளி
ஐயாபுகலினிஏது மிக
நீண்டநின்கால்களைப் பூண்டுகொண்டேன்
நீஎங்கினிச்செல்வதோது சற்றும்
தீண்டாதென்னைத்தள்ளினும் விடுவேனோ
திருவே தருவே குருவே
தீனன்என்மீது நினதயி
மானம்விடாது தினமதி
யீனஞ்செய்தீது தொலையமெய்ஞ்
ஞானம்நீயாது பழுதறு
சித்தத்தமரும்கோவே கர்த்தத்துவமுறுதேவே தரு

2 நீயெனை நீங்கிடில் எங்கும்உள்ளோனெனும்
நின்பெயர்க்குக்குறைவாமே அழுஞ்
சேயர்தமக்கமு தீயா திருப்பரோ
சிறந்தஅன்னையர்தாமே வரம்
ஆயிரந்தரங்கேட்டுக்கொடாயிட
அழகா குழகா பழகா
தற்றபொன்போலே நடையின்றி
முற்றமென்மேலே பலகலை
கறறிம்பொய்மாலே கொண்டேன் என்தன்
சிற்றறிவாலே எனைநிதம்
ஆளாய்பலபுவிநாதா மாளாநலமுறுநீதா தரு

3 எத்தனைசொல்லினுஞ் சித்தம்நன்பார்க்கத்தில்
என்றும்பதிந்திட இல்லைமிக
இத்தரைஎங்கும் பிரசித்தனைநீசற்
றிளகச்செய்வாயிந்தக்கல்லை உயர்
வித்தனைவேதநாயகன் போற்றிடும்
வேதா நாதா அபேதா
மின்னும்பிரக்கியாதா அடியன்மேல்
இன்னமும்வாதா எனைஅஞ்சல்
என்னவொண்ணுதா நின்காதிலஎன்
சொன்னுழையாதா அநுதினம்
வேதத்தமர்சர்வேசா நிதமற்றவர்மணவாசா தரு

98 இராகம்-பூரிகல்யாணி-ஆதிதாளம்

பல்லவி.

நம்பினேன்உனையே தற்காத்தருள்
வெம்பியஎனையே அநுதினம் நம்பினேன்

அநுபல்லவி.

அம்புவியெங்கும் நிரம்பும்பலஉயிர்க்
கின்பம்பொழிபுயலே உன்தன்செயலே
உண்டோ அயலே அநுதினம் நம்பி

1 புவனகாரண பவநிவாரண நவஉதாரணனே
சம்பூரணனே மெய்யாரணனே அநுதினம் நம்பி

2 கோரவினைப்பரி காரஅகிலவில் தாரஅதிகாரா
உபகாரா அதிதீரா அநுதினம் நம்

3 சுகுணசேகர மிருமனோகர சுகிர்தசாகரனே
பராபரனே தயாபரனே அநுதினம் நம்

4 பஜிக்குந்தொண்டர்கள் புசிக்கப்புசிக்கருசிக்கும்
தேன்பயமே அதிசயமே அருள்நயமே அநுதினம் நம்

5 வேதநாயகன் போதமுறப்பிரசாதம் அருள்பொருளே
மனஇருளே தொலைத்தருளே அநுதினம் நம்



99 இராகம்-நாகத்தொனி-திகரம்-திரிபுடைதாளம்

பல்லவி.

தேவாதிதேவனே ஜீவனேபிரபாவனே

அநுபல்லவி.

ஜீவாதிகரனே தீரனே சூரனே
செகத்திலேமனம்வாடிநொந்தேன்
பகத்துவேஉனைநாடிவந்தேன்

சரணங்கள்.

1 எங்குநிறையும் எனக்குனைக்காட்டாய்
ஈதென்ன கண்கட்டுமாயமோ
அங்கும்இங்குமே உனைத்தேட
அலையவைத்தாயிது ஞாயமோ
தங்குபதேசஞ் செய்யாயின்மை
தான்அடியேன்சிறுபிராயமோ
எங்குலதெய்வமே தாயேதந்தையே
இதுதான்புத்திரநேயமோ கன தேவா

2 எத்தனையோபிழைசெய்தேன் அப்பிழை
எண்ணஉன்னாலும் கூடுமோ
கத்தனேநீயருள் செய்தால்என்னோடு
கருமப்பேய்போராடுமோ
அத்தனேஎன்பால் நீவரில்உன்தன்
அடியேன்வருந்தி வாடுமோ

இத்தலம்நீவரில் முத்தர்கள்சமுகம்
எங்கேஎன்றுனைத்தேடுமோ உயர் தேவா

3 அருளிற்பெரியனி மருளிற்பெரியனுன்
ஆதரிப்பதுன்பாரமே
பொருளிற்பிரியமு யிருளுக்குரியனாய்ப்
புரிந்தேன்துர்வியாபாரமே
ஒருமைப்பாடறு மனதுக்கேதினம்
ஊரெல்லாம் சஞ்சாரமே
திரு அற்புதனே வேதநாயகனே
செய்வாய்நீஉபகாரமே ஒரு தேவா

---

100 இராகம்-குந்தளவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

நிதம்நிதம் உனையேதொழுதேனே
பதமலர் அருள்கோனே நித

அநுபல்லவி.

சததவைபோகா சகலநிர்வாகா
மதுரைப்பிரவாகா வரகுணயோகா நித

சரணங்கள்

1 அறம்வரஇல்லையே அகம்வரவில்லையே
மறம்ஒருமலையே மனமொருசிலையே
புறமயல்வலையே புகுமதிகலையே
துறவறநிலையே துயர்வினைதொலையே நித

2 மலர்வலர்தீயே மனமொருபேயே
புலமொருநாயே புலிகொடுமாயே
பலவிதமாயே படர்வுறும்நோயோ
தலமிசைநீயே தயைபுரிவாயே நித

3 அடியவர்இனவே அருபவர்வனமே
கொடியவர்சினமே குறையறுதனமே
முடிவறுதினமே முறையுறுகனமே
அடிதொழும்வேதநாயகன்தரிசனமே நித

---

101 இராகம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி.

என்ன சொன்னாலும்நீ இரங்காதிருப்பது
ஏதோ குணக்கடலே

அநுபல்லவி.

உன்னதவுகனே உலகநிர்வாகனே — என்

சரணங்கள்.

1 இகசுகம்அநுசிதம் என்பதென் அபிமதம்
தகவுறும்உயர்பதம் தாவென வந்திதம் — என்

2 இன்னமும்எனக்கினம் எனக்குநின் தரிசனம்
மன்ன என்கண்முனம் வாவெனவேதினம் — என்

3 மாயைபடாந்திரம் மாறஓர் தந்திரம்
நீயருட்சுதந்தரம் நீட்டெனநிரந்தரம் — என

4 உலகவியாபாரமே ஒழியாவிசாரமே
கலகசம்சாரமே கவலைஅபாரமே — என்

5 அருமறைவாசகா அடியர்பிரயோசகா
தருமப்பிரதாயகா தனிவேதநாயகா — என்



102 இராகம்-இந்துஸ்தான்காப்பி-ரூபகதாளம்

பல்லவி.

நாதா அடியேன் மீந்தன்கோபம்

அநுபல்லவி.

ஆதாரமாகவே அகிலத்தைத்தாங்கும்

சரணங்கள்.

1 தாரம்சுதர்இல்லாச் சந்நியாசியென்றேனோ
சீருறில்லாப்பரவேசி என்றேனோநாதா — நாதா

2 தந்தைதாயில்லாத தனியர்என்றேனோ
எந்தஉயிரும்பெற்ற இனியர்என்றேனோ — நாதா

3 மன்னும்ஒருபொருள் இல்லா வறியர்என்றேனோ
சின்னஅணுவும்நுழை சிறியர்என்றேனோ — நாதா

4 உரியஆண்பெண்ணல்லா ஒருத்தரென்றேனே
விரியபலயுகங்கண்ட விருத்தர்என்றேனே நாதா

5 ஆதியந்தம்இல்லா அநாதியென்றேனே
ஜாதிகுலமில்லா நிர்ஜாதியென்றேனே நாதா

6 வீடுவாசலில்லாத வெளியர்என்றேனே
கூடன்னம்துணியில்லாத எளியர்என்றேனே நாதா

7 மனம்புகுந்தொளிகின்ற மரயர்என்றேனே
உணும்நெஞ்சுக்கெட்டா உபாயர்என்றேனே நாதா

8 சகலஉலகச்சுமை தாங்கிஎன்றேனே
மிகநரர்அன்புக்கு வீங்கிஎன்றேனே நாதா

9 மற்றோர்கண்ணிற்படாத மாணிஎன்றேனே
முற்றும்வாய்பேசாத மௌனிஎன்றேனே நாதா

10 குணமில்லார்களைக்காயும் கோபிஎன்றேனே
அணியங்கமில்லா அரூபிஎன்றேனே நாதா

சீர்பேர்இல்லாநாம தேயர்என்றேனே
ஆருந்துணையில்லா அபாயர்என்றேனே நாதா

12 மாதின்றிஉலகீன்ற மாயஞ்சொன்னேனே
வேதநாயகாஇன்னம் வேறென்சொன்னேனே நாதா

---

### 103 இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைப்போலஎனக்குறறபேர்களிந்த
உலகந்தனில் உண்டோ

அநுபல்லவி

அன்னைதந்தைகுருதேவே இந்த அகிலகாரணபிதாவே உ

சரணங்கள்.

1 தந்தைதாய்க்கு மனஸ்தாபம்வரில்
சாற்றுவார்கள்பலசாபம் மண்ணில்
எந்தநேரமுமே பாபஞ்செய்யும்
எனக்குநீசெய்வது லாபம் உன்

2 அண்ணன் தம்பிக்குண்டு பாகம் அதை
அடையுமட்டுமேவர் ஸ்நேகம் பின்பு
எண்ணுவார்கள்பல துரோகம் நீ
ஈவைகன்மைகள் அநேகம் — உன்

3 மனைவிபாலர்க்கன்னவஸ்திரம் தரும்
மட்டுமேஅவர்கள் மித்திரம்
நினைவர்செய்வர்பல சூத்திரம் என்றும்
நீடும்உன்னருள் சமுத்திரம் — உன்

4 ஏவல்மன்னர்க்குண்டுதுறையே அதை
ஈந்திடாதவர்க்குச்சிறையே உன்னை
மேவினோருக்கில்லை குறையே தொழும்
வேதநாயகன்தன் இறையே — உன்

---

104 இராகம்—காப்பி ரூபகதாளம்

பல்லவி.

நாளை நல்லநாள் புண்ணியம்செய்யும்

அநுபல்லவி.

ஆளும் வேதநாயகன் தாளிணையுதிக்கும் — நாளை

சரணங்கள்.

1 பாபமில்லாத காலக்ஷேபமுஞ்சுஜனசல்
லாபமுமேபரம லாபமாகக்கொள்ளும் — நாளை

2 வேதமும்பெரியவர் போதமும்தேவசங்
கீதமும்முதலான நாதங்களுடன்செல்லும் — நாளை

3 ஞானமும்ஜீவாபிமானமும்பரன்பத
தியானமுமேசெய்து மோனநிலையில்நிற்கும் — நாளை

4 பக்திநிசுதர்கூடும் பக்தவாயாவரும்
சித்தநிர்மலமுடன் பக்திபுரிந்திடும் — நாளை

5 கூனர்குருடர் அங்கஈனர்பிணியுடையோர்
தீனர்முதலியோர்க்குத் தக்க தருமஞ்செய்யும் — நாளை

---

105. இராகம் சாவேரி ஆதிதாளம்.

பல்லவி.

ஏதோ இன்னம் வாதோ இரங்காதோ உன்மனமே

அநுபல்லவி.

வேதஸ்ரோதய விமலச்சந்த்ரோதய
வித்தகநயகுண உத்தமசிரேஷ்ட
பக்தர்கள்பழுதறு சித்தஅபிஷ்டா ஏதோ

சரணங்கள்.

1. ஐம்புலவேடர்நாட்டை ஆடிதிரியுங்காட்டை
வெம்பாபப்பேய்வீட்டை விரும்பியேதுன்பமூட்டை
மேவிமனந்அயர்ந்தேன் நிலைமையில்லாப்
பூவின்சுகம்வியந்தேன் அநுதினமும்
பாவவழிநடந்தேன் இனிமேல்வரும்
சாவையெண்ணிப்பயந்தேன் நிரந்தரம்
தரைமுதலாகஎங்கும் விரியுஞ்சுந்தரமே
அரியகருணைமழை சொரியுங்கந்தரமே ஏதோ

2. தீயமனோவியாபாரம் தீர்ந்திடவேயிந்நேரம்
நீயருள்பரிகாரம் நின்பதமேஆதாரம்
நேசஅபிமானம் சற்றும்இல்லாமல்
பேசுவேன்ஞானம் எனக்குலவ
லேசம்அநுஷ்டானம் இலையேஉப
தேசன்மானம் கொடுத்தருள்செய்
தினமனமகிழுவுறு கனதிரவியமே
அனவரதமும்ஒளிர் தினகரமயமே ஏதோ

3. நீர்க்குமிழிஎனவே நிலையாவாழ்வுகணவே
பார்க்குள்உனைவனவே பரிந்தருள்வாய்கனவே
பாசங்குலையாதா எனக்குமோகா
வேசங்கலையாதா உலகம்செய்யும்
மோசந்தொலையாதா உன்மீதுகன
நேசம்நிலையாதா நிலைமைபெறு
நீதநிரஞ்சன அபேதசுகுணமே
வேதநாயகன்மனப் போதமர்மனமே. ஏதோ

106. இராகம் பந்து ஆதிதாளம்.

பல்லவி.

நீயே சர்வசக்தன் நல்ல
நிச்சயனேகனே அக்ஷயனே — நீயே

அநுபல்லவி.

தாயுந்தந்தையுந் தமரும்அறுமே
மாயுந்தொழிலறு வாழ்வுபெற்றுமே — நீயே

சரணங்கள்.

1. பல்லாயிரம்அண்டம் படைப்பாய்உடைப்பாய்
எல்லா உலகமும் எள்ளினுள் அடைப்பாய் — நீயே

2. அஸ்திவாரர்தூண் அருஞ்சுவரிலையே
பத்தியாநீசெய்த பகிரண்டநிலையே — நீயே

3. பலபொருள்தங்கிடும் பர்வதம்போலே
தலையண்டகோடிகள் தாங்குவாய்மேலே — நீயே

4. திருநெய்செபமில்லாத் தீபங்கள்போலே
பரிதிசந்திரன்மீன் பலசெய்ததாலே — நீயே

5. அண்டம்அகண்டம் அடங்காதசரீரம்
தொண்டர்கள்மனமலர் சுமக்குமோபாரம் — நீயே

6. பாரபூதக்கள்உன் பணிசெய்யுஞ்சேரியே
சூரியன்உனதடற் சோதிமுன்கரியே

7. யுகப்பலகோடிகள் உனக்கரைக்ஷணமே
நிகழுமுக்காலமும் நினக்குக்கிரகணமே — நீயே

8. சகலக்கும்ஊட்டிநீ தானமொன்றும்உண்ணாய்
நிகழ்பெருங்காவலால் நித்திரைபண்ணாய் — நீயே

9. தினகரசந்திர தீபம்ஏற்றிடுவாய்
வனமுகிற்கடத்தால் மழையூற்றிடுவாய்

10. நடவாய்பறவாய் நாடெங்குமிருப்பாய்
உடலாய்உயிராய் உயர்வாய்பெருப்பாய் — நீயே

11. மரங்களினுழைந்தே மலர்வாகிளைப்பாய்
கரங்களில்லாதே கருமங்கள்விளைப்பாய் — நீயே

12. கண்ணுய்ப்பொருள்களைக் காட்டுவாய்பார்ப்பாய்
அண்ணுசகலமும் ஆட்டியேதீர்ப்பாய் நீயே

13. கனைகடல்உனதருட் கடலிலோர்திவலை
இனிவேதநாயகா எனக்கென்னகவலை. நீயே



10எ. இராகம் தோடி ரூபகதாளம்.

பல்லவி

ஞானகுருபரவடிவே அருமறையின்முடிவே ஞான

அநுபல்லவி.

மோனசுகாசனசம்பிரப்
முத்தியளித்திடும் நித்தியபரப்பிரம ஞான

சரணங்கள்.

1. பரமரனுனஎன்மீதுனக்குக் கிருபைஇலையா-எந்தன்
பாவம்தொலைத்தென்னை ஆள்வனக்கொருமலையா
தாமதம்நீசெய்யாதேகட்எனக் கென்னநிலையா நிதம்
தஞ்சம்பதகஞ்சம்பிர பஞ்சம்தருநஞ்சநதொலை ஞான

2. தீனகிருபாநிதியென்றபேர் கொண்டநீஅலவா-அருள்
செய்தென்னை ஆள்வதினல் உனக்கியாதொருசெலவா
ஆனமலர்ப்பதம்அண்டும் நான்கிள்ளைநீஇலவாபுவி
அஞ்சும்புலன் அஞ்சும்பகைநெஞ்சும்செயும்வஞ்சம்தொலைஞா

3. நின்மலநித்திய நிரஞ்சனநீதவிநோதா-நாளும்
நிகிலசராசரம்யாவையும் தாங்குபிரக்கியாதா
தன்மவிலாச சுகாநுபவானந்த நீதா-எனைச்
சாடும்வினைவாடும்வழி பாடும்பரவீடும்கொடு ஞான

4. நம்பும்அடியவர் துன்பம்அகற்றுங் குணளாபவ
நாசமகேசபிரகாச விலாசதயாளா
அம்புவியில்வேதநாயகன் போற்றும்பொற்றுளா இங்கும்
அங்குப்புவிஎங்கும்புகழ்•தங்கும்பகிரங்கப்பெற. ஞான

1. அறியேன்மேற்குக் கிழக்கு
அன்புமில்லேன்நின் கழறகு
சிறியேன்மேல்ஏன் வழக்கு
ஜெபதபத்தில்எனைப் பழக்கு

3. பாழ்மனமேவல் விரும்பு
பாவம்அதற்குக் கரும்பு
தாழ்வுறுநான்சிறு துரும்பு
சாமியென்மேல்மனந் திரும்பு பர

4. நினையேன்தர்மம் அதர்மம்
நிலமிசைநான்மூட ஜென்மம்
அணையேஎதின்னம் வர்மம்
அகற்றிடுவாய்என்னது கர்மம் பர

5. அகண்டமண்டலாதி பத்திய
ஆதியந்தரகித நித்திய
மிகுந்தகுணபரண சத்திய
வேதநாயகன் ஸ்துத்திய பர



410. இராகுபியாகு ஆதிதாளம்.

பல்லவி.

பாதம்நம்பினேனே போதம்அருள்கோனே

அநுபல்லவி.

வேதமுதலோனே மாதவர்பிரானே பாதம்

சரணங்கள்.

1. ஆதரவுநீயே ஐயனேஎன்தாயே
வாதைமலநோயே மாற்றிஅருள்வாயே பாதம்

2. திங்குகள்அநேகம் செய்திடும்என்துரோகம்
நீங்கிடவிவேகம் நீயருள்அமரோகம் பாதம்

3. முத்தர்கள்சமுகனே முக்கியபிரமுகனே
உத்தமசுமுகனே ஓவேதநாயகனே. பாதம்



111. இராகம் கனகவசந்தம் ஆதிதாளம்.

பல்லவி.

நீயேதுணைபரனே துன்பம்
நீங்கிட அருள்வரனே

அநுபல்லவி.

மாயாதிமிர விஜயதினகரனே
தாயாகியசர்வ சாதககரனே — நீயே

சரணங்கள்

1. அடியேன்செய்வதெல்லாம்அரும்பாபம்
கொடியன்மீது கொள்ளாதேகோபம் — நீயே
2. பண்ணேன்துதியே படியேன்விதியே
கண்ணேமணியே கதியேநிதியே — நீயே
3. உனையேநம்பிடில் உண்டோபயமே
அனையேவினைதீர்த்தருள்வாய்ஜெகமே — நீயே
4. மாதவம்உடையவர் மகிழ்பவராகிநா
வேதநாயகன்தொழும் விபுதர்கள்சகிநா. — நீயே

---

112. இராகம் பைரவி திரிபுடைதாளம்.

பல்லவி.

நாதாகன வேதாதினம் நிதாவரமே

அநுபல்லவி.

போதாசுக தாதா அதி நியாதாபிர சாதாபுவி — நாதா

சரணங்கள்.

1. நித்தியம்அநித்தியம் சுகத்தினைமதித்திடு
பைத்தியம்விடுத்தினிய சத்தியம்உதித்திடவே — நாதா
2. சுந்தரமடந்தையர்கள் சந்திரமுகந்தனை
நினைந்தென்றுசிந்தனைசெய் தந்திரம்ஒழிந்திடவே — நாதா
3. சொப்பனமேயொப்பனைகொள் அற்பஉடலைப்பாருள்
எனைப்பீடம்வைப்பதற நற்பலன்உறப்புவன — நாதா

4. மாதர்நிதிபூதலமேல் ஆதரம்உறுதபடி
சாதகப்பிரபோதமருள் வேதநாயகன்புகழும். நாதா

---

113. இராகம் நாதநாமக்கிரியை ஆதிதாளம்.

பல்லவி.

வேதநாயகனே மெய் மெய் மெய் வேத

அநுபல்லவி.

பாதகம்செய் துழலும்பாழ்மதியே-ஐயன்
பாதங்கள்அன்றி நமக்கார்கதியே
பூதலவாழ்வினொடு புகழ்நிதியே-வெறும்
பொய்-பொய்-பொய்-பொய் வேத

சரணங்கள்.

1. அத்தமியாதொளிற் திவாகரனை-அதி
அற்புதமான சிவாகரனை
சித்தமிசைஒளிர் சுதாகரனைத்-துதி
செய்-செய்-செய்-செய் வேத

1. பூதலம்எங்கும் இசைபோனவனை-அதி
புனிதனை உயிர்க்குயிர் ஆனவனை
மாதவர்காணுகின்ற மானவனை-உன்னுள்
வை-வை-வை-வை வேத

3. நாதபூதபௌதிகஸ்தாபகனை-வேத
நாயகன்மீதில்என்றும் ஞாபகனை
ஓதரிதானஏகவியாபகனைப்-பணிந்
துய்-உய்-உய்-உய். வேத

---

114, இராகம் கௌளிபந்து ஆதிதாளம்

பல்லவி.

ஓ-ஓ ஜெகநாதா ஒருவரம் உதவிடல்ஆகாதா

அநுபல்லவி.

தேதினப்பல பாவேபாடிஎன்
நாவே இளைத்தேன். ஓ-ஓ

சரணங்கள்.

1. மனம்விஷப்பிரியம்-சகலமும்
வசாகைங்கரியம்
சினம்மதம்மாற்சரியம்-பூண்ட என்
செய்கைகள் ஆச்சர்யம்
இனமாகிய பக்தஜனமுடன் ஐக்கியம்
கனவிலும் நீங்காமல் ஓ-

2. பொய்யை மெய்யெனநாடி அநித்தியப்
பொருள்களையே தேடி
வையகம்எங்கும்ஓடிநான்செய்த
வஞ்சகம்பலகோடி
மையற்கரிஇடர்கள் செய்யவேதொடருதே
ஐயோ-கூ-கூ-கூ ஓ-ஓ

3. நேசர்சிந்தாமணியே அடியேன்
நெஞ்சகம் பூண்அணியே
ஆசையில்வரும்பிணியே தொலைத்துநல்
அறமேவிடப்பணியே
ஈசனேஉனைத்தொழும் தாசன்வேதநாயகன்
பாசவலைகூறுமல். ஓ-ஓ

---

115. இராகம் தேசமுகாரி ஆதிதாளம்.

பல்லவி.

போதம்தர என்னவிவாதம்
எனக்கமல
போதம்தர என்னவிவாதம்

அநுபல்லவி.

வேதம்உணர்ந்தொழுகும்
நிதம்உடையவர்க்குப்
பேதம்அறவறப்பிர
சாதம்அருள்தெய்வமே போதம்

க. மோகம்பெருகியவெள
கிகம்எனும்பெரும்பிர
வாகந்தனில்அழுந்தி
ஆகம்மெலிந்தேன் ஐயா. போதம்

2. நெஞ்சோர்புறம்பலன்கள்
அஞ்சோர்புறம்வின்ஞோர்கண்
நஞ்சோர்புறம்வருத்தும்
என்சோர்வேலாம் அகலப் — போதம்

3. பெண்ணாசையாளும்வளர்
மண்ணாசையாளும்நிதி
எண்ணாசையாளும்மனம்
புண்ணாகிவாடினேனே — போதம்

4. ஏதும்அறிவில்லாஎன்
மீதுவர்மஞ்செய்தல்
காதுபரமபக்தர்
ஓதும்வேதநாயகச. — போதம்

---

## 116. இராகம்-கௌரிபந்து-ஆதிதாளம்.

பல்லவி.

சருவேசாசரணம் எனக்குன் தாளே ஆபரணம்

அநுபல்லவி.

இரவும்பகலும்உனையே அநுசரணம்
இசைந்திடச்செய்து நல்லபிரகாணம் — சரு

சரணங்கள்.

1. நீயேசெய்வதெல்லாம் உபகாரம்
நின்மேற்சொல்லஉண்டோ விவகாரம்
தீயேன்புரிந்திடும்பிழைகள் அபாரம்
தேவாசெய்இதற்கோர் பரிகாரம் — சரு

2. புண்ணியம்செய்திலன்கடுகுப் பிரமாணம்
பொய்யன்நான்ஆயினும் இது பிரமாணம்
எண்ணிடில்எனக்குமின்றோர் விழிபாணம்
என்சரித்திரம்பெருங்கதா புராணம் — சரு

3. பேசுவதெல்லாய்வாசா ஞானம்
பெரும்பாவியர்க்கெல்லாம் நான் தானம்
நேசாசகலமும்உனதா தீனம்
நீயருள்எனக்குக்கிருபாரச பானம் — சரு

4. ஈமேல்தொடுக்கின்றபாணப் பிரயோகம்
எனமுறநீமுனிந்திடில்எது நிரவாகம்
மாமோகாதியில்மயங்கி னேன் ஆகம்
வரவேதநாயகஅருள் பரிபாகம் சரு

---

117- இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

சமயம்ஈதையா நலம்எனக் கமையலுதையா

அநுபல்லவி.

அமர்செய்திவினைச் சுமைதொலைத்தெனை
அமலன் ஆக்கிடல்நேர்த்தி-ஒரு
சமமிலா அருட்பூர்த்தி-உரு
நிமலகாரண மூர்த்தி சம

சரணங்கள்.

1. இன்னம்தாமசமோ வினைசுமந்
திடஎன்னால்வசமோ
கின்னல்சகசமோ உனக்கருள்
ஈயஅவசமோ
அன்னமென்னடை மின்னல்நேரிடைக்
கன்னியர்விழிஇனையே மனம்
தன்னில்பாய்ந்திடும்சனையே இனி
என்னசெய்வேன்நீ துணையே சம

2. கருணைகூறாயோ எனதுளக்
கவலைதீராயோ இந்தத்
தருணம்வாராயோ எளியேன்
தன்முகம்பாராயோ
இரணியம்பெண்கள் தரணிமதந்தக்
கரணமேவமெய்துறந்தேன் கடல்
திரணம்போலெங்கும்பறந்தேன் உன்தன்
சரணபங்கயம் மறந்தேன் சம

3. மாயைநீங்காயோ எனைமுகம்
மலர்ந்துநோக்காயோ வினைத்
தியைபோக்காயோ எனை அதி
ஈலன் ஆக்காயோ

நீயலாதுசகாயம் ஏதினித்
தீயவர்பயங்கரனே மல
நோய்அறவருள்வரனே வேத
நாயகன்தொழும்பரனே. சம

---

118. இராகம்-இந்துஸ்தான்காப்பி-ஆதிதாளம்.

பல்லவி.

வாவா வாவா என் இதயந்தனில்
வந்தேமலரடி-தந்தே ஆண்டிட- வா

அநுபல்லவி.

சாவால்வருந்துமுன் காவாகாத்திடில்
தாவா பூவார் ஜீவா தேவா. வா

சரணங்கள்

1. மின்னார்கள்விழிவலை தன்னார்தயங்கினே
உன்னாதரவில்லாமல் பன்னாள்மயங்கினேன் வா

2. பொய்யானவாழ்வுதனை மெய்யாகநம்பினேன்
ஐயாநின்அடிக்கன்பு செய்யாமல்வெம்பினேன் வா

3. சிந்தாகுலங்கெட விரந்தாளில்திண்மையா
எந்தாயேகிளனை முனிந்தேகல்நன்மையா வா

4. வேதநாயகன்தொழும் சீதமலர்ப்பாதனே
ஆதவனெனப்புவி மீதில்வரும்நாதனே. வா

---

119. இராகம்-இந்துஸ்தான்காப்பி-ஆதிதாளம்

பல்லவி.

இன்னமும்என்மீ துனக்கேன்பராக்கு
நின்னருள்தந்தெனை நிகைதூக்கு இன்ன

அநுபல்லவி:

பன்னரியபுவன மனோகரா
உன்னதப்பிரதாப கிருபாகரா இன்ன

சரணங்கள்

1. ஏதுங்கதியில்லா ஏழைநானே
என்னசெய்யும்சலம் நீங்குமீனோ
பாதவனஜமலரே நம்பினேனே
பாகேஅமுதே பணிந்தேனே — இன்ன

2. சலமெனும்காய சுகபோதம்நாடிக்
கர்த்தனேசெய்தேன் வினைகோடிகோடி
வேனில்வெயிலுற்ற புழுப்போலவாடி
வேதனைவந்தேன் உந்தன்பாதம்தேடி — இன்ன

3. அண்டபகிரண்ட சர்வாதிகாரா
அவ்வியக்தமய அசகாயசூரா
தொண்டன்வேதநாயகன் மனோசஞ்சாரா
தோஷபரிகாரா உதாரதீரா. — இன்ன

---

120. இராகம்-சுருட்டி-சாப்புதாளம்.

பல்லவி,

இப்படிப்பட்டநான் எப்படிஉன்முகத்
தேவந்துவிழிப்பேன் ஐயா — இப்

அநுபல்லவி.

தற்பறியாதவர் தமதறிவினைத்தூண்டும்
தாயேதந்தையேஎன்மேல் நீயேஇரங்கவேண்டும் — இப்

சரணங்கள்.

1. பாதாதிகேசபரியந்தமும்நான்விடப்
பகலும்இரவும்மாயை பண்ணும்என்நெஞ்சில்நடம்
ஏதம்அறஅந்நெஞ்சம் ஏகாயிடம்எவ்விடம்
எனினும்உன்னிடம்வர வெனில்அதுமுழுமூடம் — இப்

2. கத்தனேஎன்மேல்அற்பக் காற்றடிக்கினும்பொறேன்
காசினியெல்லாங்கெட்டுக் கலக்கினும்துயருறேன்
எத்தனைபொருள்பிறர் எனக்கீந்திடினுமறேன்
எச்சிற்கையாலும்காகம் ஓட்டிடான்இழிவுறேன் — இப்

3 இகபரிசைநான்சுமந் திடுவதுபழிச்சுமை
எனினும்பிறர்செய்பற்ப இடருக்கும்செய்யேன்க்ஷமை
மிகஅற்பர்தமைச்சேர்வ தல்லால்மேலவர்தமை
வேதநாயகனேநான் மேவிஅறியேன்இம்மை இம்

---

### 121 இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்

பல்லவி.

எந்தவிதமும்உன் கந்தமலர்ப்பதமே!அடியேன் அடைந்திட
சிந்தைமகிழ்ந்துநீ தந்தருள்வாயிதமே

அநுபல்லவி.

அந்தரமெங்கும் அமர்சர்வசாக்ஷியே
வந்தனைசெய்பவர் மானசக்காக்ஷியே எந்

சரணங்கள்.

1 சகசமானிடர்தமக்குப்பாவமே பிழையாவும்பொறுத்துத்
தயைசெய்தாள்வது நின்சுபாவமே
தகவேஉன்சரித்திரப்பிரபாவமே அநுதினமும்பாடிச்
சாதகம்பெற என்மனோபாவமே
தந்தையேநீதானே உனக்கொரு
மைந்தனும்நானே இவ்வாறுநான்
சொந்தமானேனே தரிசனம்
தந்தருள்கோனே புவிதனில்
நிகரில்லாதநியாயப் பியசித்தனே
சகலலோகசராசர கர்த்தனே எந்

2 மணாலன்னல்கல்லாய்ந்திடும்வகையே-எனைச்சோதித்திடில்
என்மனத்தில்உள்ளதெல்லாம் வினைத்தொகையே
குணமுண்டோபுவிவாழ்வுவெறும்புகையே-அதைவிரும்பிஎன்மன
க்குரங்கு ஐம்புலன்களும்செயும்பகையே
கோதையாமோகம் தனில்வரும்
வாதைஅநேகம் எவர்க்குமே
ஈதநுபோகம் எனக்கினிப்
போதும்இப்போகம் அநுதினம்
புணரும்ஆனந்த பொக்கிஷசாலையே
மணமிருந்தருள் மலரும்சோலையே

8 தாலைதபிள்ளையைத் தள்ளல் பாந்தமா இதுநான்குபேரும்
சரியென்றொப்புக்கொள்ளும் சித்தாந்தமா
நாதனேஎன்னைமுனிதல்சாந்தமா-எனதுள் இரும்பையெந்நாளும்
இழுக்கும்விஷயம்காந்தமா-உன்னையேகதியென
நண்ணியசித்தர்பெருந்தவம்
பண்ணியசுத்தர் நிகரறு
புண்ணியபத்தர் முதலிய
எண்ணிலாமுத்தர் அடையுமுன்
பாதவிதிஅவர்க்கே பிதிராஸ்தியா
வேதநாயகன்பங்கென்ன நாஸ்தியா என்

212 இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏகாணயோகா அநுதினம் எனையாண்டருளே

அநுபல்லவி

சேகரகுணதிவ்ய தேஜோமயசாத்திர
பாகநித்யானந்த பாக்யபரக்ஷேத்திய ஏகா

சரணங்கள்.

1 கண்டுநிகர்மொழியும் வண்டுநிகர்விழியும்
தண்டுநிகர்புயமும் கொண்டுமயக்குமந்த
பெண்டுபிள்ளைகட்குழைத் தூண்டுறங்கிநிதமும்
மண்டுவினையலைதுன் தொண்டுசெய்தறிகிலேன் ஏகா

2 நாடேன்பெரியரொடு கூடேன்புண்ணியந்தன்னில்
நீடேன்உனதருளைத் தேடேன்உனதுபுகழ்
பாடேன்அநுதினங்கொண் டாடேன்பதமலரைச்
சூடேன்அருவினையைச் சாடேன்சுரர்புகழும் ஏகா

3 நாதாதிவ்யவரப்பிர சாதா அகண்டசமு
கிதாநிவினைக்கதி அடியர்கள்ச
மேதாநிலைகொள்பஞ்ச பூதாதிரிகர்பவி
நோதாதினதினமும் வேதநாயகன்புகழ் ஏகா

123 இராகம்-மோகனம்-ரூபகதாளம்

பல்லவி.

இன்னம்பராமுகமாமோ வினை
நின்னருள்தான்றிப்போமோ

அநுபல்லவி.

மின்னல்உறும்புகழ் நன்னலமேவிய
வேதார்த்தா கன போதார்த்தா-ஓ இன்

சரணங்கள்.

1 வன்பிழைஒப்புக்கொண்டாலே க்ஷமை
மன்னர்செய்வார்புவி மேலே
என்பிழையைப்பலகாலே ஒப்பி
னேனேமுனிவதென்பாலே
அன்பெனுந்தெப்பம் இல்லாமல்வினைக்கடல்
ஆழ்ந்தேனேவினை சூழ்ந்தேனே-ஓ இன்

2 தன்பதியைப்பகையோரே கொள்ளத்
தான்பார்த்திருப்பவன்யாரே
நின்பதிஎன்மதிதேரே அதில்
நீங்காமல்உன்கண்முன்னேரே
உன்பகையோரெனும் காமக்குரோதாதிகள்
உற்றாரேஜெயம் பெற்றார்-ஓ

3 நெஞ்சங்கவலைக்குவிடா ஐயா
நிலைசோதனைக்கு நான்ஈடா
அஞ்சாதேநீஇங்குவாடா என்
றருளாதின்னம்வேறுபாடா
தஞ்சமெனவேதநாயகன் போற்றிடும்
தாதாவே பெற்றமாதாவே-ஓ இன்

---

124 இராகம்-உசேனி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஏகநாதா அருப்பர போகம்நீதா

அநுபல்லவி

பாகவிகஜித கற்பகாரண்ணிய
பதிதபாவண பரமகாருண்ணிய

தேகம்நிறைஅதி ரூபலாவண்ணிய
நேயர்தலைமிசைக்க செயும்நிர்தாக்ஷிண்ய

சரணங்கள்.

1 நாளுமூழ்கினன் பாப அங்கனம்
நாடினேன்பெரியோர்கள் வங்கனம்
ஆளும்படிதரித்தனைநீ கங்கணம்
அன்போடெனைச்சேர் நல்லோர்கள்தங்கணம்
நீளும்அகண்டித மாகியோங்கிய
மாளுந்தொழிலுறு மாசுநீங்கிய

2 அடியன்மீதுனக் கென்னபிணக்கமே
அகற்றுவாயெனை தகங்கொள் உணக்கமே
நெடியநின்பத மலர்க்குவணக்கமே
நிதமுநான்செய்ய அருள்நல்லிணக்கமே
கடியதுயர்க்கடல் கடக்கஉனதிணை
அடியலாதிலை அயலுண்டோபுணை ஏக

3 உதிக்கும்பலகதிர் நிகரும்விதுரனே
உயர்நித்தியானந்த நகரச்சதுரனே
துதிக்கத்துதிக்கவே இனிக்கும்மதுரனே
சூழுஞ்சிவராசிகள் தம்பிதிரனே
ருதிக்குமாயையைக் கொன்றுதாழ்விக்கும்
மதிக்கும்வேதநாயகனை வாழ்விக்கும் ஏக

---

126 இராகம்-புன்னாகவராளி-ரூபகதாளம்

பல்லவி.

தயைபுரியே எனதுளத்துயர்பிரியே

அநுபல்லவி.

உயரும்தர்மசம்வர்த்தனை
உத்தமர்தம்மன நிர்த்தனை
கயவர்இழிகுலமர்த்தனை
கருதரும்புண்ணியயத்தனை தயை

சரணங்கள்.

1 புண்ணியம்நாயேனுக்கெட்டி
பொய்களெல்லாம்வெல்லக்கட்டி
திண்ணியமெஞ்ஞானதிட்டி
சிறிதீயில்என்னநட்டி
சின்மயமேமெய்வேத நன்மயமேஎனையுறு
தின்மைப்பழியோட நன்மைப்பலன்நீட
உண்மெய்ப்பதம்பாட கன்மப்பயிர்வாட தயை

2 என்குறைபாராட்டாதே
இன்னம்என்னைவாட்டாதே
நின்கோபங்காட்டாதே
நிபங்கள்என்மேற்சாட்டாதே
நிச்சயமேநிலைபெறும் அக்ஷயமேகணமுறு
நேசத்திடம்ஓங்க பாசத்திடம்நீங்க
மாசற்றரம்வீங்க வாசத்தகைதாங்க தயை

3 அண்டசராசரரூபா
அகதிகளுக்கனுதாபா
விண்டலமண்டலபூபா
வேதநாயகன்லாபா
விண்மணியேஎனதிரு கண்மணியேபழிசெயும்
வேகப்பவமோட்டி மோகப்பகைவீட்டி
பாபப்பதம்நீட்டி யோகப்பதிகாட்டி தயை

---

126 இராகம்-ஜங்கலா-ரூபகதாளம்.

பல்லவி.

நல்லவரந்தந்தருளுவாய்
நாதனே அபேதனே

அநுபல்லவி.

அல்லும்பகலுமுனைநாட
அற்புதபரமார்த்தந்தேட நல்

சரணங்கள்,

1 அன்பருடனேகூடவும் அநுதினந்துதிபாடவும்
இன்பசாகரம்ஆடவும் எனைரக்கண்டால்ஓடவும்

2 பஞ்சப்புலனையடக்கவும் பாவக்கடலைக்கடக்கவும்
நெஞ்சமொடுங்கிக்கிடக்கவும் நீதிநெறியில்நடக்கவும் நல்

3 தீனர்களையுதவவும் இறைவனைத்தியானிக்கவும்
ஞானவழியில்தங்கவும் நானுன்வழியில்தூங்கவும் நல்

4 பத்தர்பரவுந்தேவனே பரமதிவ்யகிருபாலனே
வித்தகமனோபாவனே வேதநாயகசஞ்சீவனே நல்

---

127 இராகம்-பூரணச்சந்திரிகை-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்தான்பாராமுகமோ இதுதகுமோ-சுவாமி

அநுபல்லவி.

சன்னிதானதரிசனம் அருளாமல் இன்

சரணங்கள்.

1 செந்தாமரைப்பதமே சேர்ந்தேனிதமே
நொந்தேன்பலவிதமே நோய்தீர்த்தருள்விதமே
சிந்தைதனிற் பிழைகொண்டேன்
தீமைகள்செய்துகைகண்டேன்
சந்ததமும்கலம்விண்டேன்
சர்ஜ்ஜனசங்கமும் அண்டேன் இன்

2 பூண்டேன்அபராதம் புகழேனின்பாதம்
ஆண்டோய்என்துரிதம் அறவேசெய்துரிதம்
நீண்டோன்பெருந்தகை பூணேன்
மூண்டபெரும்பழி நாணேன்
முத்திபெறும்வழி காணேன் இன்

3 அடியார்திரவியமே அமலோதயஸ்வயமே
வடிவார்ஆலயமே வளருந்தேஜோமயமே
திடமுறுபுவனதாரா
தினகரகோடிசரீரா
விடயமுறாஅதிசரீரா
வேதநாயகன் உபகாரா இன்

---

128 இராகம்-பிலகரி-ரூபகதாளம்.

பல்லவி.

கருணாலயபதியே தினமும்உன்
சரணம்புகும்கதியே

அநுபல்லவி.

சருவபேதவிநோதகாரண
பரமசாதகபவநிவாரண

சரணங்கள்.

1 நிதம்வெருக்கவெருக்க வென்றூசி
நிமிஷந்தோறும்நிறையும்படமாசு
அதுபோல்உன்தன் அகமுகம்மாசு
அகலவேவல்லவன் அருள்ஒளிவீசு
அகிலகோடிவிசாலகற்பித
சகலஜீவதயாள அற்புத — கரு

2 இங்கென்செய்கைகள் யாவும்நிர்ஷ்டம்
எனக்குப்புண்ணியம் என்றும்அபீஷ்டம்
பங்கம்தீர்க்கில் உனக்குண்டோகஷ்டம்
பரமனேஅருளாயோ உத்கரிஷ்டம்
பாரமாகவேபண்ணும்பாதகம்
தீரவேநீசெய்வை சாதகம் — கரு

3 அமலபாஸ்கரகோடிசொரூபா
அகண்டசச்சிதானந்த பிரதாபா
நிமலவேதவேதாந்தநிரூபா
நிர்விகற்பநிரஞ்சனதீபா
நீதபூரணநிலயமஞ்சித
வேதநாயகன் இதயரஞ்சித — கரு

---

129 இராகம்-அமீர்கல்யாணி-ரூபகதாளம்

பல்லவி.

நாதாகிடையாதாவரமே ஜெகநாதா

அநுபல்லவி.

பாதாரவிந்தம்நம்பும் பாவியைமேதாவியாக்க

சரணங்கள்.

1. எந்நாளுமுடவிர்த்தி இல்லையேதிரிகரணசுத்தி
மந்தமானஎன்துர்ப்புத்தி மாறவே அருளாயோசித்திநாதா

2. ஆணவமெனுமதயானைஎன்வசம் ஆகவே அருள்ஞான அங்குசம்
சுகதுக்காதிகளில்சமரசந்தோன்றவே அருள்வாய்தயாரசம்நா

3. அடயவாதநிர்வாக ஆபத்பாந்தவ அருட்பிரவாக
சிவசார்வபௌமயோக வேதாகமகணஸ்வாநுபோக நாதா

---

## 130, இராகம்-அபூர்வம்.

பல்லவி.

சருவவிநோதா திருவருள்தாதா சருவ

அநுபல்லவி.

இரவுபகல்உனதிணையடி நாடவும்
கருமநிர்மல சுகசாகரம்ஆடவும் சருவ

சரணங்கள்.

1. பசிதாகசோகரோக பாபசரீரம்
கசிவுறுமலஜல காமபண்டாரம்
சுசிஅறும்இகல்வினை தோஷம்அபாரம்
நிசமயனே அருள் நீப்ரிகாரம் சருவ

2. கடல்வேகரை காணுதகாசம்
இடர்உறல்போலவே மனதுநிர்வாகம்
மடம்அறஅருள்செய் நிர்மலபரிபாகம்
கடவுளைநாடினேன் கருணைப்பிரவாகம் சருவ

3. சுரகணசேவித துரிதவிநாசன
சருவதயாபர சபாவிமோசன
கருமநிவாரண கருணாவிலோசன
வரவேதநாயகன் மனமடலாசன சருவ

---

## 131. இராகம்-சரசாங்கி-ரூபகதாளம்.

பல்லவி

எத்தனைகவிபாடினும் பலன்ஏதுமில்லையே எத்தனை

அநுபல்லவி.

சித்தம்வாக்குக்கிரியை அத்தனையுந்தினம்
உத்தமமார்க்கத்தில் ஒத்துநில்லாமல் எத்தனை

சரணங்கள்.

1. சந்ததமும்பரன் சுந்தரபாதத்தை
அந்தரங்கம்தனில் சிந்தனைசெய்யாமல் — எத்த

2. மோசம்செயும்ஆசா பாசங்களென்னும்பி
சாசந்தனைச்சர்வ நாசஞ்செய்யாமல் — எத்தனை

3. கோபம்பொறாமைபொய் லோபம்மதமுதற்
பாபங்கட்கேமனஸ் தாபங்கொள்ளாமல் — எத்தனை

4. மும்மலபாசத்தை நிர்மூலமேசெய்து
நிர்மலசித்தனுய் தர்மஞ்செய்யாமல் — எத்தனை

5, தாயகனும்வேதநாயகன்தீனர்ச
காயன்தனைநெஞ்சுள் நேயம்பண்ணுமல் — எத்தனை



132· இராகம்-ஹம்சதொனி-ஆதிதாளம்

பல்லவி.

ஞானோதயவரம் அருளே

அநுபல்லவி.

பானோதயபரம்பொருளே — ஞானோ

சரணங்கள்

1. மாயாவிகாரஜெகமே தோயாமல்அருள்சுகமே
தூயர்நேசனே ஸ்வயம்பிரகாசனே
தீயர்நாசனே சித்விலாசனே — ஞானோ

2. தேகாபிமானம்அறவே யோகாநுசாரம்உறவே
பாகம்நீட்டுவாய் பாதம்நாட்டுவாய்
மோகம்ஓட்டுவாய் முத்திகாட்டுவாய் — ஞானோ

2. ஆதாரம்வேறுமில்லையே பாதாரவிந்தம்நீலையே
போததாயகா புண்ணியஆயகா
வேதநாயகா விமலதூயகா — ஞானோ

### 133. இராகம்-தீரசங்கராபரணம் ரூபகதாளம்.

பல்லவி.

ஆதிமூலனே நீதிபாலனே-நித்ய ஆதி

அநுபல்லவி.

வேதபோதசாதகம்பர
நீதியைபுரிவாய்-நித்ய ஆதி

சரணங்கள்.

1. திட்டமாகமாயைக்கே அஷ்டதிக்கும்விஜயமா-நான்
துஷ்டன்ஆதலால்எனக்கும் எவ்விட்டவரப்பயமா
கெட்டஇதயமே அதில்ஷ்டமா ...
சிஷ்டரோடெனைக்கூட்டி ஞானசிஷ்டன்ஆக்குவாய்நித்ய ஆதி

2, துணைஉன்பாதஇணையலாது சொல்லவேறுண்டோ
இணையிலாபொருகிணையிலாதிதைப்பவனெனக்குத்தான்இரண்டோ
குணம்தருவாயே அருள் மணம்தருவாயே
உணரொண்ணாதநினதுசேவைபுரியவே அருள்வாய்நித்ய ஆதி

3. மனையைச்சுத்தஞ்செய்திலிருந்தால் மனிதர்க்கும்சகசமே
மனதகமெனும்உனது நெஞ்சம்நிதமலவசமே
புனிதஞ்செய்வாயே அதில்இனிதமர்வாயே
தாயன்வேதநாயகனுக்கு தரிசனமருள்வாய் நித்ய ஆதி

---

### 134. இராகம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

பிக்ஷை அருளாயே ஞான பிக்ஷை

அநுபல்லவி.

அக்ஷயநிர்மல லக்ஷணனேஜீவ
ரக்ஷணனேஅதிபக்ஷமுடன்ஞான பிக்ஷை

சரணங்கள்.

1. சத்தியமாருத புத்தியும்ஒயாத
பத்தியும்மெய்ஞ்ஞான சித்தியுமுத்தியும்

2. நேசருடன்சகவாசமும்ஞானப்பிர
காசமும்உன்விசுவாசமும்நேசமும் பிக்ஷை

3. தானம்பொறைஅருள் மானம்இதராபி
மானம்நிதானமும் மோனமுந்தியானமும் பிக்ஷை

4. பூதமெலாம்விப ரீதம் உருமேவ
ஆதரவுசெய்யும் வேதநாயகனே. பிக்ஷை



135. இராகம்-சௌராஷ்டிரம்-சாப்புதாளம்.

பல்லவி.

இந்தமனம் கொட்டதையா
பந்தவலைப் பட்டதையா இந்த

அநுபல்லவி.

சந்ததம்புண்ணியந்திரண்டு
சுந்தரதேகா நான்கொண்ட இந்த

சரணங்கள்

1. சொன்னபடி கேளாச்சண்டி
தோஷமூட்டை தூக்கும்பண்டி
உன்னிடம்வரமேவ நோண்டி
ஓடும்விஷயத்தை அண்டி இந்த

2. இதரர்வாழக்கண்டால் வாட்டம்
எவருங்கெட்டாலோ கொண்டாட்டம்
மதனநெருப்புக்குக் காஷ்டம்
வாயுவினும்வேகம் ஓட்டம் இந்த

3, சுகதுக்கபேதம் போதிக்கும்
சூழ்நலமெல்லாம் பேதிக்கும்
பகல்இரவென்று சாதிக்கும்
படும்விஷம்உண்டு சோதிக்கும் இந்த

4. காடுங்கரையும் சஞ்சாரம்
காமப்பசாசுக் காகாரம்
நாடுபிரபஞ்ச வியாபாரம்
ஞானமிதற்கெட்டாத் தூரம் இந்த

5. பாதகங்கட்கெல்லாங் குரு
பாசம்விளைவிக்கும் எரு
ஏதுவில்லா விஷதரு
எனக்கநுகூல சத்துரு — இந்த

6. பஞ்சபூதாதி நிர்மாணு
பக்தர்கள் இதயவாணு
விஞ்சையாம் சாஸ்திரபுராணு
வேதநாயகப் பிரமாணு. — இந்த

---

## 139. இராகம்-மனோகரம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

எந்தையேஉனக்கும் அடியேனுக்கும்
எத்தனைபேதம் ஐயா — எந்

அநுபல்லவி.

சந்தசர்வ சாம்பிராஜ்ய பிரபுத்துவ
சாசுவததேவதேவ மகத்தவ — எந்

சரணங்கள்.

1. தேவனீசகல புவனேசன
சிறியனான்உன்தன் தாசாநுதாசன்
காவலனை ஸ்வயம்பிரகாசன்
கசடனான் அந்தகாரப்பிரவேசன் — எந்தை

2. சத்தியமாகநீ தர்மசொரூபி
தாரணிமீதிலேநான் பெரும்பாபி
நித்தியனான நீசுத்தஅரூபி
நிச்சயமாக நான்மெத்தக்குரூபி — எந்

3. சமமில்லாத நீயேமலரகிதன்
சாமிநான்உலகில் மலசகிதன்
விமலனேநீபல பிராணிகள்விகிதன்
வேதநாயகனேநான் எவர்க்குமேசகிதன். — எந்தை

# காலை ஸ்தோத்திரம்.

---

### 137. இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

உனக்கேநமஸ்காரமையா-இடர்
ஒன்றும்வராமலே நன்றுசெய்தாயே — உன

அநுபல்லவி.

தனக்கோர்நிகர் என்றுமிலாத
தயாகரனான பராபரனே — உன

சரணங்கள்.

1 நேத்திரங்களை நீயெம்மாத்திரமுமூடாமல்
காத்திருந்தாயென்னை இராத்திரிமுழுதும் — உன

2 சத்துருபயமின்றி நித்திரைசெயவென்னைப்
பத்திரமாயுன்கையில் வைத்திருந்தாயே — உன

3 முந்தும்அரவம்விஷ ஜெந்துக்களால்அபாயம்
வந்திடாமலேகா பந்துசெய்தாயே — உன

4 தீயும்வெள்ளமுங்காற்றும் பேயும்விலங்கும்பல
நோயும்வராமற்காத்தாய் தாயுந்தந்தையுப்போல் — உன

5 நாங்களோர்தடையின்றி தூங்கஇராமுழுதும்
வீங்கிருட்போர்வைதனைத் தாங்கினாயே — உன

6 இருட்டொழிவிடியும் பொருட்டுநீபுவிதனை
உருட்டிஇராமுழுதும் புரட்டிநொந்தாயே — உன

7 பூதநாயகனேபிர போதநாயகனேசங்
கீதநாயகனேநல் வேதநாயகனே — உன

# ஈசுரவருடத்துப்பஞ்சத்தைப்பற்றி

## பாடியது.

---

139. இராகம்-உசேனி-திசிரஜாதி-மட்டியதாளம்.

பல்லவி.

பஞ்சம்தீர் ஐயா - உனையன்றித்
தஞ்சம்ஆர் ஐயா

அநுபல்லவி,

வஞ்சகமேகம் உலோபர்கள்போலே
மண்ணில்மழைபொழியாமையினாலே
சஞ்சலமாகித்தளர்ந்தோ மெண்மேலே
சாதிகதிஉன்தன் தாமரைக்காலே    பஞ்

சரணங்கள்.

1 எட்டுநாள்பத்துநாள் பட்டினிபோட்டே
இடையிலேகந்தை இருகையில்ஓட்டே
ஒட்டிஉலர்ந்தவுடல் என்புக்கூட்டே
ஒருகோடிபேர்கள் வசிப்பதுகாட்டே
ஊரும்இல்லாமல் குடிக்கத்தண்
ணீரும்இல்லாமல் அன்னமெனும்
பேரும்இல்லாமல் பசிதீர்க்க
ஆரும் இல்லாமல்
பாரில்அனேகர் பரதேசிஆனாரே
ஊரில்அனேகர் உயிர்மாண்டுபோனாரே    பஞ்

2 தாரங்களை புருஷர்கைவிட்டார்
தந்தைதாய்பிள்ளைகளை விலையிட்டார்
வேரும்இலையும் கிழங்குஞ்சாப்பிட்டார்
வெறுங்கையராய் வெளியேபுறப்பட்டார்
வேலியும்அற்றார் பெண்சாதிகள்
தாலியும்விற்றார் வேலைசெய்து
கூலியும்பற்றார் பலபல
சோலிகள் உற்றார்
தோலும்எலும்புமாய்த் தோன்றியேசாகிறார்
பாலரும்தாய்முலைப்பால் அற்றுத்தேய்கிறார்    பஞ்

# ஹரிதோபதேசக்கீர்த்தனைகள்.

## கடவுளைத்தியானிக்கும்படி வற்புறுத்தல்.

---

140. இராகம்-குந்தவராளி-ஆதிதாளம்.

பல்லவி

மனமேநீசதாமத்தைவாழ்த்துவாய்-இனம்
வாழ்த்துவாய்

அநுபல்லவி.

அனவரதமும்நீ அரும்பதம்பாடிக்
கனகசபேவிடக் கலந்துகொண்டாடி — மன

சரணங்கள்.

1 வெப்புவார்த்தைகளை பெரும்பாபம்
வாய்க்குச்சேதமல்லால் என்னலாபம்
எம்பிரான் திருமகிமைப்பிரதாபம்
எடுத்துப்பேசுவது சத்காலக்ஷேபம் — மன

2 ஏகமாயுள்ளுருகியேபெரிய
இருகண்ணானந்த பாஷ்பங்கள்சொரிய
தேகபரவசமா தாயன்புவிரிய
சிரகராதிகள் அஞ்சலிபுரிய — மன

3 கரும்புதின்னக்கைக் கூலியுண்டோ
கற்கண்டோ அமுதோ தாபசுத்தனோ
விரும்புப்பிரமானந்தமேயதுதானே
வேதநாயகன்பேர்க்கிணைசொல்லலாமோ — மன

---

## இதுவும் அது.

141. இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேநீமறவாதே ஐயன்பதத்தை — மன

அநுபல்லவி.

கனவிலும்நிதமும் நனவிலும்பலபல
நினைவி[illegible] அனவரதமுமே — மன

சரணங்கள்.

1 மண்ணுஞ்சராசரமும்விண்ணும்படைத்தளித்துநீக்கும் பராபரன்றன்
வண்ணமலர்ப்பதத்தைக்கண்ணும்பொழுதில்இன்பந்தேக்கும் ஆகையினாலே
உண்ணும்பொழுதுமேவேலை பண்ணும்பொழுதும்ஒன்றை
உன்னும்பொழுதுந் துன்பம் நண்ணும்பொழுதுமே — மன

2 கல்லும்பெருமரமும் புல்லும்புழுமுமேசஞ்சாரம் செய்யுமந்திபோய்
இல்லும்புல்லும்இரியாவரமுஞ் செய்தென்னசாரம் வெளியிலேதான்
செல்லும்பொழுதுவார்த்தை சொல்லும்பொழுதும்பகை
வெல்லும்பொழுதும் பின்னும் அல்லும்பகலுமே — மன

3 அஷ்டதிசையுமோடிக் கெட்டலைந்தேதாம்புவோம்சரீரம் இருப்பிடத்தை
விட்டகலாமல்தியானநிஷ்டை செய்வதில்என்னபாரம் பலவிபாரு
குஷ்டம்வந்தாலுந்துரைப் பட்டம்வந்தாலும்-பெரும்
கஷ்டம்வந்தாலும்பிறர் வெட்டவந்தாலுமே — மன

4 கெடுக்கும்பலவினையை ஒடுக்கும்வேதநாயகனுமம் துயர்வராமல்
தடுக்குமிகபரமுங்கொடுக்குந்தனமு முண்டுமேகூதமம் நித்திரைசெய்யும்
படுக்கும்பொழுதுந்துகில் உடுக்கும்பொழுதும்தன்னைத்
தொடுக்கும்பொழுதும்சுகம் அடுக்கும்பொழுதுமே — மன

---

## இதுவும் அது.

---

### 142. இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இனியாகிலுமனமே ஐயனைநீ நினையாயோதினமே
இகபரசித்திபெறவே

அநுபல்லவி.

தனியிளம்பருவமுந் தாண்டிப்போனதே
பனிபோலவளர்ந்து இப்பருவமானதே — இனி

சரணங்கள்

க. ஆசைக்கொருகஜுப்புமயிரேனும்இலேயே
ஐயையோகொக்குபோல்நரைத்ததுதலேயே
காசுக்குதவாக்கிழமென்பதுகிலேயே
கன்னியர்க்கும்இனிநாம்கசக்கும்வேப்பிலேயே இனி

உ. கண்கள்இரண்டும்மூக்குக்கண்ணாடிதேடும்
காலூசலாடும்ஒர்கழியைக்கைநாடும்
தண்கொள்ளும்வேரற்றுத்தந்தங்கள்ஆடும்
தடித்தாலும்நில்லாமல்மெய்யவதம்ஓடும் இனி

ங. பசிவந்தபின்நெல்லைவிதைப்பதுமதியோ
படுந்தாகம்வந்தபின்வெட்டுநல்நதியோ
விசயஞ்செய்திடச்சாகுங்காலமேததியோ
வீணேயுனக்குக்கெட்டுப்கச்சம்மதியோ இனி

ச. காலந்தனக்கென்னசெய்தோம்அபகாரம்
கனத்தஆயுளைஅதுதினஞ்செய்யுஞ்சேதாரம்
மேலும்மேலும்உடலில்வினைக்கும்விகாரம்
வேதநாயகன்சொல்லேவேதாந்தசாரம் இனி

---

# துர்க்குணங்களை வெளியிடல்.

கசங. இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி

நெஞ்சேஇந்தநாடெங்குந்தேடினும்
நீசர்நமைப்போலுண்டோ

அநுபல்லவி.

அஞ்சாமல்நாளும்அக்கிரமங்கள்நீடுவோம்
சஞ்சலப்பேயால்தலைசுற்றிஆடுவோம் நெஞ்

சரணங்கள்.

க. தேகம்உயிர்முதல்யாவையுமேதந்த
தேவன்தனைமறப்போம்-கரு
மேகநிழல்போமறையும்பொய்வாழ்வை
விரும்பிநலந்துறப்போம்
மோகவிகாரத்திலேதடுமாறுவோம்
முன்னொன்றும்பின்னொன்றுமாகப்பொய்கூறுவோம்
வகையாஎங்கும்பிறர்களைத்தூற்றுவோம்
எப்படிஐயையோநாங்கரையேறுவோம் நெஞ்சே

உ. கோயில்குருக்கள்ஜெபதபம்யாவும்
கொடுவிஷம்போல்வெறுப்போம்-தினம்
நேயமதாகவேதாயமறைசொல்லும்
நீதிகளைமறப்போம்
ஆயிரம்பாவம்அடிக்கடிபண்ணுவோம்
அன்னியமாதரைஆசையாய்எண்ணுவோம்
ஈயாஉலோபகுணத்தையேநண்ணுவோம்
ஏழைபசிபோகாதிருக்கமுன்னுவோம் நெஞ்சே

ங. உள்ளபடிநமக்கெள்ளளவென்கிலும்
உத்தமந்தானுமிலையே-பாவ
வெள்ளம்நிறைந்திடும்பள்ளந்தனிலே
விழுந்துகெட்டோம்நிலையே
வள்ளலைப்போல்வெறுமாயக்கூத்தாடுவோம்
வந்தவரியர்க்குவாசலைமூடுவோம்
உள்ளேபகையும்உதட்டன்பும்நீடுவோம்
ஊரைஅடித்தேஉலையிலேபோடுவோம் நெஞ்சே

ச. உற்றகலைஎல்லாம்கற்றமெய்ஞ்ஞானிபோல்
ஊரைமயக்கிடுவோம்-பழு
தற்றமெய்ஞ்ஞானத்தில்பற்றுதலின்றி
அலையஉடம்படுவோம்
ற்றவரைக்கெடுத்துப்பழிவாங்குவோம்
வாழ்வோரைக்கண்டால்வயிறுப்பிலீங்குவோம்
நற்றவம்செய்யமல்நாளெல்லாம்தூங்குவோம்
நல்வேதநாயகன்பாதத்தைநீங்குவோம் நெஞ்சே

# மனமயக்கந் தவிர்த்தல்.

---

## 114. இராகம்-யதுகுலகாம்போதி-அடதாளசாப்பு.

பல்லவி.

நீமலைக்காதே நெஞ்சே நீமலைக்காதே

அநுபல்லவி.

நேமத்துடன்ஐயன் நாமத்தைப்போற்றிடில்
க்ஷேமத்தைக்கொள்ளுவோம் காகத்திலேசிக்கி நீமலை

சரணங்கள்

1. மோகத்தையும்அதி வேகத்தையுந்தரும்
போகத்தையும்உத்தி யோகத்தையும்நம்பி நீமலை

2. ஆட்டையும்மந்தையின் மாட்டையுங்கட்டிய
வீட்டையுமுன்கெட்ட கேட்டையுமேஎண்ணி நீமலை

3. ஈச்சுக்கீச்சென்றோடும் மூச்சுப்போனால்ஒரு
பேச்சுக்காகாமலப் பீச்சுக்குழல்நம்பி நீமலை

4. நாட்டைக்கொள்ளையிடும் வேட்டைக்காரன்நமன்
காட்டைக்கலைத்துயிர்க் கூட்டைக்கொள்வான்ஐயோ நீமலை

5. கேட்டைத்தருஞ்சோற்று மூட்டைதனைஒன்ப
தோட்டைப்பாண்டத்தைக்கற் கோட்டையெனநம்பி நீமலை

6. கொண்டையிலேரத்நத் தண்டையிலேவிழிக்
கெண்டையிலேமதன சண்டையிலேசிக்கி நீமலை

7. சேலையென்றும்முத்து மாலையென்றுந்தினம்
வேலைகொள்ளும்பெண்கள் காலைத்தழுவியே நீமலை

8. சொத்துதமக்கென்று கத்துவதன்றிஆ
பத்துக்குதவாத புத்திரரைநம்பி நீமலை

9. தாயகனைவேத நாயகனைவிட்டு
மாயவலைபட்டுத் தூயநெறிகெட்டு நீமலை

---

சாதகபாதகம் என்னவந்தாலும்
தவம்விடக்கூடாதே கோடி
தர்மம்உனக்குண்டு கர்மம்விலக்கும்
தனத்தினைத் தேடாதே
போதவேதநாயகன் தாள்விடுத்தாயே
பொன்னை அடுத்தாயே என்னைக்கெடுத்தாயே போனது

## நித்தியானந்தன் தேடல்.

146. இராகம்-ஹிந்துஸ்தான் காபி. ஆதிதாளம்

பல்லவி.

நித்தியானந்தத்தைநாடு பர
நின்மலசுகந்தேடு மனமே நித்தியா

அநுபல்லவி.

சத்தியமார்க்கந் தனிலேகூடு
சற்சனசங்கத் துடன்உறவாடு நித்தியா

சரணங்கள்.

1. இந்திரஜாலம் உலகவைபோகம்
இன்றைக்கிருப்பதுவோ சந்தேகம்
அந்தரமின்னல்போல் அழியும்தேகம்
ஐயோ அதனுடன் உனக்கென்னஸ்நேகம் நித்தியா
2. தனதானியமுத லானசம்பத்து
சாசுவதமோ அதற் காயிரந்தத்து
தினமுங்கவலை விளைத்திடும்வித்து
சீச்சீ அதனை விரும்பல்விபத்து நித்தியா
3. மெய்யேஒன்றுக்கும் உதவாப்பண்டம்
மிருகாதிகள்சூழ் மாமிசகண்டம்
பொய்யோ இதற்கிங்கு நித்தியகண்டம்
புண்ணியஞ்செய்யுனக் காயிரந்தண்டம் நித்தியா
4. காண்பதெல்லாமில்லை யல்ல அநித்தியமே
காயம்இறந்திட வேண்டுமகத்தியம்
வீண்பொருள்மீதுனக் கென்னபைத்தியம்
வேதநாயகன் சொல்லேசத்தியம். நித்தியா

6. அய்கமெலலாங்கரு மேகவியாதி
அதனைமறைக்கமெய்யில் அணிவோம்விபூதி
கங்கையிலஇல்லாப்பொருள் மனையாதி
நாம்துறந்தோம்நல்ல துறவறநீதி புண்ணிய

7. ஏகஅன்னம்தள்ளிப் பிடிப்போம்ஒருசந்தி
இதபரபக்ஷணங்களால் நிறைப்போமதொந்தி
தேகபலம்ஒடுங்கில் விரக்தியாம்பிந்தித்
திடமானால்நம்செய்கை சிரிக்குமேசந்தி புண்ணிய

8. உள்ளத்தின்அழுக்கை எந்நாளுமேகழுவோம்
உடலைக்கழுவநீரில் அடிக்கடிவிழுவோம்
கள்ளத்தனமாகச்சந் நிதிமுன்னே அழுவோம
காசுக்குநாயையும் கைகட்டித்தொழுவோம் புண்ணிய

9. பசியில்லாதவர்க்குச் செய்வோம்அன்னதானம்
பசித்துவந்தோரைச் செய்வோம்அவமானம்
சுசியாகப்பிறர்க்குப தேசிப்போம்ஞானம்
துர்க்குணக்கடலிலே தினஞ்செய்வோமஸ்நானம் புண்ணிய

10. பெருமையா அணிவது காவிவஸ்திரமே
பிரதிஷ்டைசெய்வது தர்மசத்திரமே
சரவியநமது துர்க்குணம்சமுத்திரமே
பாடோம்வேதநாயகன் சரித்திரமே. புண்ணிய

---

## பொருளாசை யொழித்தல்.

---

148. இராகம்—கனகவசந்தம்—ஆதிதாளம்.

பல்லவி.

பொருளை விரும்பவேண்டாம் மனமே
பொருளை விரும்பவேண்டாம்

அநுபல்லவி.

ஒருவரிடமும்நில்லா தூரெங்கும்பறக்கும்
திருவேதநாயகன் சேவடிதுறக்கும் பொருளை

சரணங்கள்.

1. பணமுள்ளவர்க்குநமன் பயப்படுவானோ
குணமுடன் அவர்களைக் கும்பிடுவானோ — பொருளே

2. தனவான்களைத்துயர் சாரஅஞ்சிடுமோ
கன்சுகமவருடனே கலந்துகொஞ்சிடுமோ — பொ

3. பார்க்கவொட்டாமலே பார்வையைக்கெடுக்கும்
வார்த்தைசொல்லாமலே வாயையுந்தடுக்கும் — பொ

4. மண்டலத்தில்நமக்குவயி றெருகுதிரா
கண்டபடிஉண்ணநாம் கபந்தனுக்கெதிரா — பொ

5. ஊரில்நம்மிருப்பிடம் ஒருமுழமட்டே
பாரிலேநமக்கேன் பலமனைக்கட்டே — பொ

6. உலகில்வயிறுநமக் குள்ளதுசாணே
மலைமலையாய்க்குவித்து வைக்குதல்வீணே — பொ

7. சங்கையில்லாமற்பணந் தலைவெட்டும்ஒருவாள்
தங்கைவருவாள்பின்பு தமக்கையுவருவாள் — பொ

8. விஸ்தாரமாகப்பொருள் வேண்டுதல்தாழ்வு
செத்தால்தெரியுமே செட்டியார்வாழ்வு — பொ

9. அருவுடன்வழைக்கு வாய்ப்பணப்பிணமே
பொருள்ஆதைக்குழிவெட்டிப் புதைக்குதல்குணமே — பொ

10. பூதமானாலும்உண்ணப் போதுமாகாணி
ஆதலால்நமக்கேன் ஆயிரங்காணி — பொ

11. ஜெண்டைச்சேலைக்காரி தான்கிழவியாகாளோ
கொண்டைப்பூமுடித்திடும் குமரிசாகாளோ — பொ

12. வெறுங்கழுத்தாயிருந்தால் விக்குமோதொண்டை
உறுந்தலைஆணிபோனால் உடையுமோமண்டை — பொ

13. கடுக்கன்இல்லாவிட்டாற் காதுகேளாதோ
உடுப்புகள்இல்லாவிட்டால் உடம்புநீளாதோ — பொ

14. கந்தலைஅணிந்தவள் கர்ப்பம்ஆகாளோ
வைரநகைஉள்ளவள் மெலிந்துபோகாளோ — பொ

15. பொருந்தச்செலவிடாமல் புதைத்திடும்பணமே
இருந்தென்னபோயென்ன இதில்என்னமனமே — பொ

16. நிதிவெள்ளியாதிகள் நிச்சயம்மண்ணே
புதையல்தன்னினமென்று புசிப்பள்மண்பெண்ணே — பொ

## செல்வச் செருக்கு.

### 149. இராகம்-தேவமனோஹரி-ஏகதாளம்

பல்லவி.

வீண்கர்வம்என்மனமே உனக்கு
வீண்கர்வம் என்மனமே

அநுபல்லவி.

காண்பொருள்சகலமும் கடவுள் ஆதீனம்
கனதொண்டமானுந் தேட்டியுமசமானம் — வீண்

சரணங்கள்.

1. நம்முடன்பிறந்ததுண்டோ உத்தியோகம்
நமக்குமுன்னேஅதுபலர் அநுபோகம்
அம்மஅதற்குக் காத்திருப்பர்அநேகம்
அனைவர்க்கும்உண்டு ராஜீகதெய்வீகம் — வீண்

2. ராசிகள்போல்செல்வம் பலருடன்கூடும்
தனமிருந்தஇடத்தில் தரித்திரம்நாடும்
கூசாமல்யானையைக் கொசுகுமேசாடும்
குப்பையுயர்ந்து கோபுரத்தையுமூடும் — வீண்

3. கனவில்கண்டகத்திரிக்காய் கறிக்காமோ
கல்லால்இரும்பால்காயங் கொண்டோமோ
தினம்அசையாமல்மண்ணில் வேர்கொண்டோமோ
சினந்துராம்சபித்திடில் நிஜசெல்லாயவேமோ — வீண்

4. தம்பொருளென்பர் மனைவியர்மைந்தர்பேரர்
தப்பினால்விடுவரோ தாயாதிக்காரர்
வெம்பிச்சமயம் பார்த்திருப்பார்சோரர்
மிச்சத்தைச்சுருட்டுவார் மேல்அதிகாரர் — வீண்

5. இடையிற்கோவணமின் றிப்பிறந்தோமெய்யே
இறந்திடுங்காலத்தும் நாம்வெறுங்கையே
உடைமைநமதுசொந்தம் என்பதுபொய்யே
ஊரார்பொருளைநாம் சுமந்தோமையே — வீண்

6. ஜெகமுழுதும்நமக்குச் சர்வமானியமா
சிந்தித்தகாரியமெல்லாம் ஜயமா
சுகதுக்கபேதம் இல்லாதிவ்யமயமா
துஷ்டன்இயமனுக்கு நமைக்கண்டால்பயமா — வீண்

7. நீடுந்தங்கையுந் தமக்கையும்அதிநேசம்
நிகழுங்கைம்மாறிக் கொள்வார்அவர்வாசம்
சூடுண்டமாடுபோல் தள்ளல்ஆபாசம்
துள்ளினமாடுபொதி சுமக்கும்பிரகாசம் — வீண்

8. தாய்வயிற்றில்இருந்து ஜனித்திட்டபோது
சட்டைதலைப்பாகுடன் நாம்வந்ததேது
மாயப்பிரபஞ்சத்தின் வாழ்வெல்லாஞ்சூது
மாவேதநாயகனை மறக்கலொண்ணாது. — வீண்

## ஊதகவாழ்வை வெறுத்தல்.

150. இராகம்-ஹிந்துஸ்தான்காப்பி-ரூபகதாளம்.

பல்லவி.

வாழ்வைநம்பாதே மனமே வாழ்வைநம்பாதே

அநுபல்லவி.

தாழ்வில்லாதநமதுஸ்வாமி
தாளைத்தேடிபாடுபூமி — வாழ்வை

சரணங்கள்.

1. தேகமாமிஸமூட்டை பல
ஜெந்துவுக்கும்நல்லவேட்டை அதில்
ஓங்காஅனந்தம்ஓட்டை உயிர்
ஓடிடஎத்தனைபாட்டை இந்த — வாழ்வை

2 இன்றைக்காணுவார்நாடு-நாளை
எடுப்பார்கையிலேஓடு-உடல்
ஒன்றுக்குதவாதகூடு-இதை
உற்றுப்பார்த்தால் வெட்கக்கேடு-புவி வாழ்

3 பெண்டுபிள்ளைக்கென்னவாட்டம் நம்மைப்
பிடுங்கித்தின்பதில்வாட்டம் கையில்
உண்டாகும்போதுகொண்டாட்டம் செல்வம்
ஓய்ந்தால்சகலரும் ஓட்டம்-புவி வாழ்

4 இந்தஉலகத்திற்பிறந்தார் முன்னம்
எத்தனையோபேர்கள் இறந்தார்-பெற்ற
தந்தைதாய்பாட்டரும் பறந்தார்-நாலு
தாரங்கள்போய்நம்மை மறந்தார்-புவி வாழ்

5 இன்றுபல்லக்கினிற்போவார் நாளை
எடுக்கும்ஆள்களும் ஆவார் நரர்
என்றவர்யாவருஞ்சாவார் மதி
ஈனர்நரகத்தில்வேவார்-புவி வாழ்

6 கூத்தில்அரசனைப்போல வேஷம்
கொண்டவர்க்குண்டோ செங்கோலே
சாத்திரநாடகசாலை-அந்தச்
சாலையில்நாம்எந்தமூலை-இந்த வாழ்

7 வண்டியும்ஓடத்தில்ஏறும் ஓடம்
வண்டியில்ஏறும் நாள்தோறும் நாம்
கொண்டபொருள்கைம்மாறும் வேதம்
கூறுஞ்சொல்லோநிறைவேறும்-புவி வாழ்

8 எண்ணிக்கையில்லாமல்இங்கே முன்னம்
இருந்தவரெல்லாம்எங்கே நாமும்
நண்ணிப்போகவேண்டும் அங்கே வேத
நாயகன்பாதம்நம்பங்கே-புவி வாழ்

---

# உடலை வெறுத்தல்.

---

151. இராகம்-இந்துஸ்தான்காப்பி-ரூபகதாளம்.

பல்லவி.

உடலைநம்பாதே மனமே

அநுபல்லவி.

குடலுந்தசையும் எலும்பும்நரம்பும்
கொழுத்துப்பழுத்துப் புழுத்துநிரம்பும் உட

சரணங்கள்.

1 இந்திரியம்மலமூத்திரம் தசை
இரத்தம்நிறைந்த பாத்திரம் பாச
பந்தப்பேய்வளர்க்ஷேத்திரம் வெறும்
பவந்தநாடகசூத்திரம் இந்த உட

2 ஆசைப்பக்ஷியின்கூடு பல
அசுத்தஞ்சேர்குப்பை மேடு இதை
ஏசிப்போபோவென்னும்வீடு கிட்ட
எட்டிவாவாவென்னுங்காடு- இந்த உட

3 கண்ணிற்பீளைகள்வடியும் இரு
காதிற்குறும்பிபடியும் சளி
வண்ணமூக்கில்வடியும் நல்ல
வாயும்எச்சிலாய்முடியும்- இந்த உட

4 பயனின்றிவிழுமட்டை கொடும்
பாம்புகழற்றுஞ்சட்டை போலே
உயிர்போனால்வெறுங்கட்டை இதை
உற்றுப்பார்த்தாலொடலொட்டை- இந்த உட

5 காகம்நாய்நரிக்கூட்டம் பல
கழுகுக்கும்நல்லவூட்டம் கரு
மேகநிழல்போல் ஓட்டம் இது
மெய்யல்லபொம்மலாட்டம்- இந்த உட

6 எத்தனைபேர்புவியாண்டார் அவர்
எல்லவருமுன்னேமாண்டார் இங்கே
செத்தவரில்எவர்மீண்டார் தெய்வ
சித்தம்ஒருவருந்தாண்டார்-இந்த உட

7 மோடியேன்ஒருக்காலே உடல்
முழுதும்எலும்புதோலே அதில்
நாடிஒடுங்கினாலே பின்பு
நமக்கிங்கேஎன்னவேலை-இந்த உட

8 கணவன்தெய்வமென்பாள்பாரி அவள்
காரியத்திற்கெட்டிக்காரி செத்த
பிணமுன்வருவாளோநேரில் சுகம்
பிரிந்ததற்கல்லோஒப்பாரி இந்த உட

9 கிருமிகட்குபகரணம் தசை
கிழிந்துவடியும்இரணம் சிறு
கருமமேற்கொள்ளுந்திரணம் இது
காணாந்தப்பினால்மரணம் இந்த உட

10 வேதநாயகன்கூறும் சொல்லை
பேறினால்நலமாறும் பல
காதந்தூர்க்கந்நாறும்-பித்தம்
கபமலஞ்சலம்ஊறும்:இந்த உட

---

## பணதூஷணம்.

---

152. இராகம்-சங்கராபரணம்—ரூபகதாளம்.

பல்லவி.

பணமேஉன்னால்என்னகுணமே தண்டம்
பண்ணினேன்சற்றும்என் கண்ணில்முன்னில்லாதே பண

அநுபல்லவி.

மணமில்லாமதமோகங்குரோதந்தான்
மார்க்கமுமூர்க்கமும் யார்க்குமேபோதிக்கும் பண

சரணங்கள்.

1 தேடி உனைத் தழுவியவர்க்கு நீ
தீர்க்காயுசு தருவாயோ இனி
நாடி யமன்அந்தசாரடிடும்போது நீ
நாளென்றுமுன்வருவாயோ
கூடியபேர்கள்குடியைக்கெடுப்பாயே
கொல்லச்சொல்லிப்பின்னுங்காட்டிக்கொடுப்பாயே
ஓடிஓடியற்பரைப்போயடுப்பாயே
உத்தமரைக்கண்டால் ஓட்டமெடுப்பாயே — பண

2 பத்தியில்உன்னைப்படைத்ததல்லால்முன்
வெறுப்போதுகூடவந்தாயோ இஷ்ட
சித்தியும்சக்தியும்புத்தியுங்கைகூடச்
சிலாசாசனம்நீதந்தாயே
புத்தியிருக்குமிடம்விட்டுநீங்குவாய்
பொய்யும்புரட்டும்உள்ளஇடத்தில்தாங்குவாய்
எத்திசையுங்கெடுத்துப்பழிதாங்குவாய்
ஈயாதவர்கையகப்பட்டுதூங்குவாய் — பண

3 மண்ணில்உனைநரர்பண்ணினதன்றி
மனிதரைநீபண்ணினாயோ உயர்
விண்ணினைமண்ணினைப்பண்ணினோன்நேச6
விலகச்செய்சத்துருநீயே
பண்ணரிதான இடமெங்குமோடுவாய்
இந்திரஜாலஞ்செய்துவிளையாடுவாய்
வண்ணநார்கள்மனக்கண்ணைமூடுவாய்
வைத்தும்புதைப்பவர்வாயில்மண்போடுவாய் — பண

4 வஞ்சகமாயப்பிரபஞ்சமெல்லாம்நீ
விளைத்துச்செய்வாய்கொடுங்கோன்மை
நஞ்சம்நீகருணைநெஞ்சம்உண்ணுகமெய்ஞ்
ஞானிகட்கல்லவோமேன்மை
பஞ்சமாபாதகங்கட்குநீஆலயம்
பாரில்துன்பமென்பதெல்லாமுன்தன்மயம்
மிஞ்சஉனையுடையோர்க்கொழியாப்பயம்
வேதநாயகன்பேணுனக்குள்ள[illegible]சயம் — பண

# பரஸ்திரீகமனம்விலக்கல்.

153. இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி

மாதரைநினையாதே நெஞ்சே — மாத

அநுபல்லவி.

பூதலமேல்பெரும் பாதகமும்விப
ரீதமுமேவரும் ஆதலினால்மறு — மாத

சரணங்கள்.

1 அருமஞ்சட்பூச்சல்லவோ முகக்காந்தி
அடிக்கடிபெண்கள்நிற மாறும்பச்சோந்தி
ஒருமையாஅவர்களை விரும்புதல்பிராந்தி
உடற்குள்புகுந்துபார்த்தால்வரும்வாந்தி — மாத

2 முன்னழகும்பின்னழகுமேபட்டு
முகஅழகானதுநெற்றியிற்பொட்டு
அன்னநடையென்பதுகவிஞர்கள்கட்டு
அழகுநில்லாமற்பறந்திடுஞ்சிட்டு — மாத

3 மரித்திடுமாதர்கள்சுகம்அரைக்ஷணமே
மறுநிமிஷத்தில்உண்டாந்துன்பரணமே
பிரிந்திடில்மலசலம்ஊளும்புதோல்நிணமே
பிராணன்போனால்நரிநாய்பிடுங்கிடும்பிணமே. — மாத

4 மேனிமுழுதும்வெளி வேஷத்தின்தளுக்கு
மினுக்கெண்ணெய்பூசியேகாட்டுவாள்சளுக்கு
ஈனம்அறவேதினந்தினம்தண்ணீர்முழுக்கு
இல்லாவிடில்கப்பல்ஏற்றலாம்அழுக்கு — மாத

5 இடையில்மயக்குவது சாலியன்சேலை
இருகாதில்சொலிப்பதுதட்டான்வேலை
கடையில்விற்பதுகொண்டைப்பூமாலை
கன்னிக்குச்சொந்தமெல்லாம்வெறுந்தோலே — மாத

6 கன்னியர்விழிஉயிர்பிளந்திடும்அம்பு
கனதனம்மன்குழலுனைக்கட்டுந்தும்பு
அன்னியமாதர்கள்விஷமெனுமம்பு
அவருடன்பேசுவதேபெரும்வம்பு மாத

7 இதமாகவேமணஞ்செய்தசீமாட்டி
இகபரம்இரண்டுக்குமேவழிகாட்டி
இதரமின்னார்களைச்சேர்வோன்காமாட்டி
என்றைக்கும்அவனுக்குமூத்தவள்பேட்டி மாத

8 என்றுங்காமாதுராக்குரோகங்கள்நிலையே
ஈளயும்போட்டக்கையில்வேண்டும்வேப்பிலையே
அன்றுகொண்டவன்அறிந்தால்வருங்கொலையே
அற்பசுகத்தில்வரும்ஆபத்துமலையே மாத

9 கழுவிவிட்டாவிடில்கெட்டவீச்சு
காதவழியடிக்கும்இதிரப்பேச்சு
தொழும்அழகென்பதெல்லாம்மேற்பூச்சு
தோகையர்கிழமானால்கனைச்சு

10 அழகழகென்பதெல்லாம்வெறும்ஜாலம்
அணியுந்துணியும்போனால்அலங்கோலம்
விழல்நிகர்சுகத்தினைவெறுப்பதுசீலம்
வேதநாயகன்சொல்அநுகூலம் மாத

## இதுவுமது.

154. இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

பல்லவி.

மனமேஉனக்குமகாசுகிர்தம் மறு
மாதரைநினையாதே

அநுபல்லவி.

தினமென்சொற்படிகேட்டால் உனைத்துதி
செய்வேன்மறுத்திடில் வைவேன்-வைவேன்

சரணங்கள்.

1 சட்டிமுகத்தைச்சந்திரபிம்பமென்றும்-வெறும்
சதைக்கட்டிகளைத்தங்கக்கும்பமென்றும்
முட்டிக்கால்களைச்சொர்னஸ்தம்பமென்றும்-மாதர்
முன்கமலைக்குஞ்சபாக்கம்பமென்றும்
மொட்டைத்தலைக்கும்முழங்காலுக்கும்பிணைத்தே
முடிந்தாயே-வினை-படிந்தாயே-கெட்ட மன

2 உச்சிட்டத்தைஅமிர்தக்கட்டியென்றும்-நாறும்
ஊத்தைவாயைப்பவளப்பெட்டியென்றும்
மச்சம்பிளேவடியுந்திட்டியென்றும்-தே
வாங்குருவை ஆபூர்வசிட்டியென்றும்
பிச்சைக்காரன்கந்தையைமெச்சிக்கொள்வதுபோல்
பிடித்தாயே-பொய்யைப்-படித்தாயே-கெட்ட மன

3 செட்டிகளால்அல்லவோஇடையழகு எண்ணெய்ச்
செக்கர்களாலல்லவோ சடையழகு
தட்டார்களாலல்லவோநடையழகு மாதர்
தம்மழகெல்லாம்பலகடையழகு
குட்டிச்சுவரில்முட்டவெள்ளெழுத்தோநீ
குதித்தாயே-பெண்ணைத்-துதித்தாயே-கெட்ட மன

4 சொத்தைப்பற்களைமுத்துச்சரங்களென்றும்-மிகக்
கும்பியதோளைமூங்கில்மரங்களென்றும்
சித்தமாகக்கமலங்களென்றும்
சிக்குமயிரைச்சலதரங்களென்றும்
பித்தன்போல்வர்ணித்துதேவநாயகன்அடி
பிரிந்தாயே-துன்பம்-புரிந்தாயே-கெட்ட மன

---

இதுவும் அது.

---

155. இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

பெண்ணாசையேபெரும்பித்து-அதில்
பிரமிப்பதெல்லாம்விபத்து

அநுபல்லவி.

கண்ணாலேவலைபூட்டி அற்பசுகம்
காட்டிபுருஷரைவாட்டிவதைக்கும் பெண்

சரணங்கள்.

1 கலகலெனஅசைப்பார் அவர்நன்னடை
காட்டுமிருகமயிரேகொண்டை
உலகைமயக்கும்அவர்சேலைக்கெண்டை
உற்றுப்பார்த்தால்நம்மையுநவர்அண்டை — பெண்

2 கேவலம்அங்கமெல்லாம்பிணநாற்றம்
கிறுகிறெணமயக்கந்தலைக்கேற்றம்
ஒவியமேனிமினுக்கும்பொய்த்தோட்டம்
உள்ளேதிருப்பிப்பார்த்தால்முழுநாற்றம் — பெண்

3 கட்டிக்கட்டியாககண்பீளைசாரும்
காதிற்குறும்பிசனிளச்சில்சேரும்
கொட்டும்வியர்வைதலைப்பேனும்ஈறும்
கும்பிநாற்றமாங்குளித்திட்டநீரும் — பெண்

4 மண்ணில்எலும்புதோல்அல்லவோமாது
மற்றதெல்லாஞ்செட்டிதட்டார்செய்சூது
பெண்ணில்லாவிட்டால்பிழைப்பவர்க்கேது
பெண்ஜெபமும்அவர்போனால்செல்லாது — பெண்

5 மண்ணிற்பரஸ்திரியைச்சேருநிமித்தம்
வாழ்வுஞ்சுகமுந்தனமும்அநர்த்தம்
எண்ணில்லாத்துன்பமும்புண்களுஞ்சித்தம்
ஈஎறும்புக்குமகோற்சவம்நித்தம் — பெண்

6 இரவிற்கூத்தாடிகள்வேஷம்எடுப்பார்
இருட்டில்எவரும்மயங்கிக்கொடுப்பார்
தரையில்மின்னார்பகல்வேஷந்தொப்பசர்
ஜாலவித்தைசெய்துலகைக்கெடுப்பார் — பெண்

7 உண்டால்விஷம்வெட்டினாற்கொல்லுங்கத்தி
உன்னினோர்கண்டோரைக்கொல்லும்பெண்கத்தி
அண்டாமல்ஆடவர்ஓடிநல்புத்தி
அமர்வேதநாயகன்சொற்கேட்டால்சித்தி — பெண்

---

# உயயும் வழி.

---

156. இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி,

உய்யும்வகையிது நெஞ்சமே-வேறு
செய்யும்உபாயங்கள் வஞ்சமே உய்யும்

அநுபல்லவி.

மையல்தருமும்மலங்களைநீக்கு
ஐயன்பொற்பாதத்துக்குன்னை ஆளாக்கு உய்யும்

சரணங்கள்.

1. நிந்தைமலந்தழுவாசையேநாளும்
நிக்கிரகஞ்செய் அப்பசாசையே
எந்தவிதத்திலுமாகையே
தென்றென்றுஞ்செய்தெய்வபூசையே உய்யும்

2. நான்எனதென்றபிமானமே மிக
நாட்டுவது மதியீனமே
ஏன்உனக்கிந்தஅஞ்ஞானமே நீதான்
என்றுஞ்செய்வாய்ஜெபத்தியானமே உய்யும்

3. பெண்டுசேப்பண்டபதார்த்தமே பெரும்
பீடையாம்அந்தச்சங்காத்தமே
கொண்டஅறந்தான்யதார்த்தமே அதைக்
கூடில்உண்டாம்பரமார்த்தமே உய்யும்

4. மையல்மிகுத்துகெடாதே புவி
வாழ்வென்பது வெறுங்கூதே
ஐயும்மெய்யன்புவிடாதே வேத
நாயகனைநிதம்ஓதே உய்யும்

---

## நெஞ்சொடு பிணங்கல்.

---

### 157. இராகம்-அசாவேரி-ஆதிதாளம்

பல்லவி.

அநுதினம்இந்தப்படி உன்னுடன்போர்கொடுக்க
யாராலாகும்நெஞ்சே — அநு

அநுபல்லவி

கனபக்தரொடுசேராய் கர்மமயக்கந்தள்ளாய்
தினமும்என்னுரைகொள்ளாய் சிச்சீஇதென்னபிள்ளாய் — அநு

சரணங்கள்

1. அனந்தமுறைநான்சொல்லக் கேளாய்
அகந்தை அழியாயோ
தினந்தினமும் நீபுரிந்திடுந்துஷ்
செய்கைகள் ஒழியாயோ-நீ
நினைத்ததே திடமா-உன்னால்
நிதமுஞ் சங்கடமா
சினந்தகவலைக்கு நீ இருப்பிடமா
செய்வதெல்லாம் ஹடமா — அநு

2. படித்ததனிவேதந்தான் சொல்லிய
படிநீநடவாயோ
கடித்தவிஷம் ஒப்பாகியவினையின்
கடலைக் கடவாயோ-நீ
பிடித்ததேபிடியா ஆசைப்
பேயுன்னிடம்குடியா
எடுத்தமாயைக்கு நீ மிதியடியா — அநு

3. கடந்தமேலோர் பகர்ந்தமொழியைக்
கனவிலுமதியாயோ
நடந்தபொய்யாகிய வழிநீங்கி
நல்வழிமிதியாயோ-நாம்
அடைந்தஉடல்சதமா புவிவாழ்
வானது சாசுவதமா
தொடர்ந்துவேதநாயகன் ஹிதமாய்ச்
சொல்லியுமே மதமா. — அநு

# துர்க்குணம்போன்ற நற்குணங்கள்.

---

158. இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

செய்யவேண்டுமானால் நீ அநுதினம்
செய்-செய்-செய்-மனமே

அநுபல்லவி.

ஐயோவெறுத்தாய் நற்செய்கைகளையே
ஆசையிற்பின்சொலுந்துர்ச்செய்கைகளையே — செய்

சரணங்கள்.

1. எதிர்உதவிகருதியாலோபம்
ஈனர்கள்காற்றடிக்கினும் அதில்சோபம்
வதிதீவினைமேல்தீராக்கோபம்
வருவதுவரட்டும் இப்படிப்பாபம் — செய்ய

2. பரன் அடிமீதில்அடங்காயோகம்
பலதெய்வங்களைப்பணியாததுரோகம்
இரவும்பகலுமபுண்ணியந்தன்னில்இராகம்
இப்படியேதான்பாபம் அநேகம் — செய்ய

3. பலருக்கும்உதவிசெய்வதில்பலவந்தம்
பரஸ்திரீக்கிடம்ஈயாசுநிர்ப்பந்தம்
தலைமிசைபிறர்கிடர்செய்வதில்மந்தம்
தளராதிவ்வகைதோஷம அனந்தம் — செப்ய

4. பொய்கொலைகளவுகள்செய அறியாமை
புனிதர்போல்நாம்இலையென்னப்பொறுமை
மெய்யிலகிய அவதூறுதராமை
மேன்மேல்இப்படியேபலதீமை — செய்ய

5. நற்குணந்துர்க்குணமெனச்சொலும்அசத்தியம்
தன்காரியம்பேணாத அபத்தியம்
நற்கதிபெறுவதில்ஒழியாப்பைத்தியம்
நானிலத்தில்விதமான துஷ்கிருத்தியம் — செய்ய

9. நன்மை தின்மைகள்மேல்காமக்குரோதம்
நாளும் அச்செய்கையிலேபிடிவாதம்
தன்மகிமைக்குச்சர்வலோகவிரோதம்
தளராதில்லாமே அபராதம் செய்ய

7. ஆள்கொள்வேதநாயகன்பாதமுத்தாரம்
அணிமையை உனக்குரைத்தேன் சவிஸ்தாரம்
கேட்கில்லை ஆதலிற்கொடுத்தேன்உத்தாரம்
கெட்டசெய்கைகள்மனதிஷ்டப்பிரகாரம். செய்ய

---

## மனவஞ்சகத்தைப்பற்றி.

---

### 159. இராகம்-பந்துவராளி--ஆதிதாளம்.

பல்லவி.

புரட்டெல்லாம் எங்கே படித்துக்கொண்டனை
பகலுவாய் மனமே-இந்தப் புர

அநுபல்லவி

முரட்டுமார்க்கம் சென்றிழைகிறாய்-அனு
முனையின்உள்ளும்நீ நுழைகிறாய்-இந்தப் புர

சரணங்கள்.

1. பொருளைத்தந்தவன் அருளைமறந்து
பொருளுக்கே உபசாரம்-செய்யும்
மருளர்போல்அற்பப் பொருளைவிரும்பி
வான்பரன்உபகாரம் தன்னை
மறந்தாய்-என்னைத் துறந்தாய்-பொன்னைச்
சிறந்தாய்-பின்னைப்-பறந்தாய்-பாரில்
உருளில்லாமல் தேரோட்டுகிறாய்-பானு
உதயம்இரவிற் காட்டுகிறாய்-கன
இருள்கொள்பாசத்தில் மாட்டுகிறாய்-நாளும்
என்னைப்பம்பரம் ஆட்டுகிறாய்-இந்தப் புரட்

2. மண்டலந்தனில்கண்ட பொருளெலாம்
வண்மையென்றுநீ குறித்தாய்-பிர
சண்டஆசைக்கள் உண்டாநாலேநீ
தலைமயங்கியே வெறித்தாய்-சனத்

தாசி எனம் பேசி வினை
பூசினையே சீசீ பார
அண்டங்களைக்கை அடக்குகிறாய்-கால்போல்
ஆழ்கடல்மீதும் நடக்குகிறாய்-பல
எண்டருவிண்ணும் கடக்குகிறாய்-புண்யம்
என்றால்எழாமற் கிடக்குகிறாய்-இந்தப் புரட்

3. என்னசொல்லினும்உன்னல் செய்யாயுனக்
கேனிந்தத் தலையரட்டை-மாறும்
முன்னமேஜயோ பின்னஞ்செய்கிலே
மூளுந்திவினைததிரட்டை-இது
மோசம் எய்தும் நாசம் லவ
லேசம் விசு வாசம் இன்றி
அன்னம்போ லெங்கணும்பறக்கிறாய்-கல்லின்
ஆவிடத்துப்பால் கறக்கிறாய்-சுக
நன்னலந்தனைத் துறக்கிறாய்-வேத
நாயகன்சொல்லை மறக்கிறாய்-இந்தப். புரட்



## மனமயக்கம்.

### 160. இராகம்-வசந்தா-ஆதிதாளம்.

பல்லவி.

மயங்கிறாய்மனமே ஐயோவீணே மயங்

அநுபல்லவி.

மயங்கிறாய்மனமே வாழ்வுசொப்பனமே
மாறுமல்தினமே ஐயோவீணே மயங்

சரணங்கள்.

1. ஏகனை மோக்ஷத் தியாகனைக்கருணைபிர
வாகனைப்பணியாமல் ஐயோவீணே மயங்

1. எண்ணியபெரியோர் நண்ணியபொருளாம்
புண்ணியம்புரியாமல் ஐயோவீணே மயங்

3. நேயம்உள்ளோர்கள் தாயகன்வேத
நாயகனைத்தொழாமல் ஐயோவீணே. மயங்



## காலதூஷணை.

### 161. இராகம்-கர்பார்-ஆதிதாளம்

பல்லவி.

ஓகோகாலமே உன்போல் எவர்க்
குண்டிந்திரஜாலமே — ஓகோ

அநுபல்லவி.

போகமாகவே அண்டம் பூவெல்லாமெய்வாய்
பூனைபோலிருந்துநீ புலியைப்போற்பாய்வாய் — ஓகோ

சரணங்கள்

1. ஊரெல்லாந்தூங்கினும்உனக்கில்லை தூக்கம்
ஓயாமல்ஓடுவாயுனக்குண்டோதேக்கம்
ஆர்கெட்டால்உனக்கென்ன அறியாய்நீநோக்கம்
அதிகவட்டிகள்கொடுப்பவர்க்குன்மேல்ஏக்கம் — ஓகோ

2. பாலரைக்கிழவராப்பண்ணியேகெடுப்பாய்
பசைமதன்ஜெபம்நடவாமலேதடுப்பாய்
காலிரண்டுடையார்க்குக்கோலொன்றுகொடுப்பாய்
காலனுக்குயிரெல்லாங்காட்டியேவிடுப்பாய் — ஓகோ

3. ஆயுதமில்லாமல்யாவையும்அறுப்பாய்
அழுதாலுந்தொழுதாலும்அகன்றெம்மைவெறுப்பாய்
சாயுந்திராசுபோலேசகலமும்நிறுப்பாய்
சகலஉயிரையுஞ்சட்டியிலிட்டுவறுப்பாய் — ஓகோ

4. கல்லைப்போல்உடம்மையும்வில்லைப்போல்வளைப்பாய்
கணந்தினம்மதிவாரம்ஆண்டெனக்கிளைப்பாய்
வில்லைப்போல்வதனத்தைநச்செல்லைப்போல்துளைப்பாய்
வீங்கழகியர்க்குத்தேவாங்குருவிளைப்பாய் — ஓகோ

5. துக்கமுற்றவர்க்குநீதொலையாமற்கிடப்பாய்
சுகமுள்ளபேர்க்குநீதுரிதமாய்கடப்பாய்
விக்கலும்இருமலும்வேதனையுங்கொடுப்பாய்
மிஞ்சுந்தீர்நுரையீரலைப்பஞ்சுபோற்கெடுப்பாய் — ஓகோ

6. மலைகள் மண்டபங்களை வலிமையா இடிப்பாய்
பிரிளமூட்டலும்லற்றிடக்குடிப்பாய்
தலைதடுமாறநீதானகொள்ளை - அடிப்பாய்
தனிவேதநாயகன்தமையபாலேநடிப்பாய். ஓகோ

## உத்தியோகசம்பந்தக் கீர்த்தனைகள்.

### நியாயபரிபாலனஞ்செய்ய வரம்வேண்டல்.

162. இராகம்-சாவேரி-ஆதிதாளம்

பல்லவி.

நானேபொதுநீதி தானேசெலுத்திட—
நல்லவரம் அருள்கோனே நானே

அநுபல்லவி.

தானேயாகிய சாக்ஷாத்காரமே
ஞானேஅமுதமே திவ்யஞானசாரமே நானே

சுரணங்கள்.

1. வட்டஉலகில்யாரும் பொதுவில்அநுபவிக்கும்
மழைகால்வெயிலபூதாதி போலவே
இஷ்டர்அநிஷ்டர்தமர் எளியர்செல்வர்பெணபுமான்
என்னும்பேதம் உன்னுமல்லவலவே
திட்டமாச்சரிநீதி செலுத்தலின்மனம்நாட்டிச்
சிறியவழக்கும்பெரு வழக்கெனத்திண்ணம்நீட்டி
சட்டசாஸ்திரங்கள்மிக உணர்ந்தறிவினைத்தீட்டி
சகலஉயிர்களும்என் தன்னுயிர்போல்பாராட்டி
சிட்டபரிபாலன னெனுமுடிசூட்டிக்
தீயர்மொழிபுகாமற் செவிவழிபூட்டிக்
கூகூஎனப்பொய் கதறும்படிமாட்டி நானே

2. அருணன்சந்திரனிலை நீங்கினுந்தரைமேல்கீழ்
ஆயினும்அறத்தைநான் விட்டாமல்
வருணன்போற்பொருள்மாரி வழக்கர்பெய்யினும்அதை
வாங்கயாசகன் போற்கைநீட்டாமல்

வரும்பழக்கர்மனத்தை வன்சொற்களாற்கெடாமல்
மற்றைநீதிஉத்தியோகஸ்தர் வம்புக்கிடங்கொடாமல்
அருமையால்வழக்கா ராய்ச்சியில்பினைவிடாமல்
அப்பன்பாட்டன்சொன்னாலும் அறநெறிகைவிடாமல்
தருமதேவதைநாய ஸ்தலங்கணில்நடிக்கத்
தப்புச்சாக்ஷிகள் கிடுகிடெனவேதுடிக்க
இருமையகல்அநீதியே ஓட்டம்பிடிக்க
இலஞ்சம்வாங்கிகள் வெட்கத்தால்உயிர்மடிக்க — நா

3 அந்தவிலங்குமுடங் கூன்குருடூமைமுத
லானஜென்மம்வராமல் தடுத்தாயே
மூர்க்கமானிடஜென்மம் வராமல்தடுத்தாயே
முன்சிப்பதிகாரமுங் கொடுத்தாயே
இந்தஉபகாரத்தை இதயத்தெழுதித்தேக்கி
எவர்க்கும்பெரியவனெ னெனும்அகங்காரம்போக்கி
நந்தாவிளக்கம்போல் நவையிருளினைப்போக்கி
நான்செய்தநூறகென் நடையைத்திட்டாந்தமாக்கி
தொந்தமெனவேவிளை யாடிஉண்டுதூங்கிச்
சுகஉடலம்வளர்க்குஞ் சோம்பினைபோக்கி
விந்தைநன் முயற்சியில் மேன்மேல்ஓங்கி
வேதநாயகன்நல்லோன் எனஇசைதாங்கி



துர்வழக்காளிகளைப்பற்றி.

163. இராகம்-சௌராஷ்டிரம்-அடதாளசாப்பு.

பல்லவி.

இந்தவழக்குக்கெல்லாம்நாம்தானா கோர்ட்டில்
வந்தவனெல்லாம் நமக்கெஜமானா — இந்த

அநுபல்லவி.

நந்தன்வலியச்சண்டைபிடித்தானும் அந்த
நாகனைத்திட்டிஅவன் அடித்தானும்

சரணங்கள்.

1 தந்தைதுர்பார்க்கஞ்செய்து கெட்டானும்பிள்ளை
தாரங்களைத்தெருவில் விட்டானும்
முந்தஅதிகக்கடன் பட்டானும்நிலம்
முழுதுந்துர்விநியோகம் இட்டானும் — இந்த

3. ஓதரும்தேவதாபத்தி நாளும்
உலகில்யாவையும் வெல்லும்சத்தி
போதமுடன் அதுவேமுத்தி அதில்
புருஷார்த்தங்களெல்லாம் சித்தி
வேதநாயகன்பத்தர் மீதருடன்துன்பங்கள்
ஆதவன்முன்பனியாம் ஆதலில்துயரம் என்ன

---

# பிறர்மேற் குறைகூறாமை.

## 171. இராகம்-பைரவி—ஆதிதாளம்.

### பல்லவி.

ஒருவர்மேலுங்குறைநீ கூறாதே-திரு
உளச்செயற்காப்பிறரைச் சீறாதே ஒருவர்

### அநுபல்லவி.

வருந்துன்தொழிய மாறாதே சரு
மஞ்சுக்கிணைகிருபேசன் கஞ்சக்கழல்மறந்து
வஞ்சகக்கடலில்விழும் நெஞ்சக்குரங்கேநீ ஒருவர்

### சரணங்கள்.

1. துன்பம்என்பதெவர்க்கும் சுதந்தரமே அதைத்
தொலைப்பதற்குண்டோ ஒருதந்திரமே
இன்பம்உற்றவரெவர் நிரந்தரமே-பிறர்
இடிக்கவந்தாலுங் கட்டி அடிக்கவந்தாலும்-பழி
முடிக்கவந்தாலும உயிர் மடிக்கவந்தாலும்நீ ஒருவர்

2. பொறுமைஎக்காரியமும் சாதிக்குமே-அதைப்
பூண்டவர்க்கேசுகம் ஆதிக்கமே
மறுமையின்துயரத்தைப் பேதிக்குமேமிக
மகிழ்ந்தபோதிலும்துயர் நிகழ்ந்தபோதிலும்பிறர்
புகழ்ந்தபோதிலும்உனை இகழ்ந்தபோதிலும்நீ ஒருவர்

3. மற்றவர்தாம்செய்பினும் பெருந்தீங்குஅதை
மனதிற்கொள்ளாதிருப்பதே பாங்கு
குற்றமாகியவழிதனை நீங்குமிகக்
கோத்தபலபுவனம் காத்தபரன்அடியை
ஏத்தும்வேதநாயகன் வார்த்தையின்படிநீ ஒருவர்

---

# பரிதான கண்டனம்.

172. இராகம்-சௌராட்டிரம்-ஆதிதாளம்

பல்லவி.

சீச்சீநீர்லஞ்சம்வாங்கல் ஞாயமாமோ அதனால்உமைச்
சேர்ந்ததரித்திரம் விடிந்துபோமோ சீச்சீ

அநுபல்லவி.

வீச்சிலும்வீண்பகட்டுப் பேச்சிலும்பணம்வாங்கும்
தேர்ச்சியுடையவினைப் பூச்சிலைப்புவரே சீச்சீ

சரணங்கள்.

வரவேண்டியகடனை வகையுடன்கேட்டுவாங்கக்கூசிப்
பலரிருக்க
வலியநீர்கேட்டுவாங்க மனம்எப்படிவந்ததோ சீசீ
உலகில்நீங்கள்
பாவியபெருந்தவம் பதினாயிரம்வருஷம் ஊசி
முனையில்நின்று
பண்ணினும்போமோஅந்தப் பாவம்ஒருமுந்திரிவாசி
இலஞ்சந்தனைக்
கரம்வாங்கினோர்கள் தந்தோர்க்குப்பாததாசி
கள்ளார்க்கும்வேண்டும்நடு இரவமாவாசி
இரவும்பகலும் உமக்கேவுகராசி
ஏவரையுமயக்கிடும் நீர்புருஷதாசி சீச்சீ

2. தனதுகேடறியாமல்சகலர்க்கும்சாஸ்திரஞ்சொல்லும்பல்லி
கழுநீர்வீழ்ந்து
சாகுதல்போலயாவுந் தெரிந்தமகிமைக்கொத்துமல்லி
ஆகியநீங்கள்
மனமயங்கும்எளியரிடம் வாங்கலாமோதனம்இல்லிக்
குடநீர்போலே
வாழ்வுந்தனமுங்கெட்டுத் தாழுமென்பதுள்ளங்கை நெல்லி
ஆசையால்வளை
ஜனம்அழவாங்கிடுந் தனம்உயிர்சொல்லி
சாய்க்குமேஅதுவாழ்வின் வேரினைக்கெல்லி
இனமுமேஅடிக்கிரீர் நீர்ஜெசஜல்லி
திருட்டுதொழிலில்நீங்கள் ருத்திராக்ஷப்பில்லி சீச்சீ

6. இழிவுக்காலமான உம்மையட்டமச்சனி பற்றுதே
பொல்லார் துஷ்டனிர்
என்றுசனிபிடிக்க அஞ்சினும்பாதகஞ்சுற்றுதே
புண்ணியங்களைவிட்டு
வழிகெட்ட உங்களுக்கு வள்நிதியாவுமேவற்றுதே
ஒருசாண்குட்டி
வளர்த்திட உங்களுக்கு வருமாதச்சம்பளம்பற்றுதே
குண்டோதரன்போல்
ஒழிவில்உம்முதரத் துராப்பெருங்குழியர்
உம்மாற்சகலஉத்தியோகர்க்கும்பழியா
விழியவியாதோர்உமக் கென்னகெட்டசுழியர்
வேதநாயகன்உரைப்பது விண்மொழியா. சீச்சீ

---

## இதுவும் அது.

173. இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

பல்லவி.

எதுக்குவாங்கிறீர் லஞ்சம்-உமக்
கிடைவிடவேணுண்டோ பஞ்சம் எதுக்கு

அநுபல்லவி

வாதுக்குவீணே வழக்குரைபேசி
வாங்கிறீர்என்னபிழைப்பது சீச்சீ எதுக்கு

சரணங்கள்.

1. நீசம்பொருளினை ஆசைப்பட்டேநல்ல
நீதியைநீக்குறீர் ஐயோ அபக்
கியாதியைத்தூக்குறீர் உமக்கும்பொய்த்
தாசிக்குமேஎன்னபேதம் நீர்தான்
சாதிப்பதென்னபிரமாதம்
காசுக்கேன்இந்தவிவாதம்-அப்பு
சாத்தான்முதலோர்க்குநீர்முதற்பாகம் எதுக்கு

2. மணமுமலரும்போன்றநேயர்களிடத்திலும்
வாங்குவீர்பரிதானம் உமைவிட்டு
நீங்குமோ அவமானம்-அலக்ஷியம்
பணமென்றூன்காணும்பாஷாணம் பிறர்

பணமென்றால்விடுகிறீர்பிராணம் அதில்
குணமுண்டோகடுகுப்பிரமாணம்
கூசுகிறீரில்லையிடையாதோநாணம் — ஏதுக்கு

3. பாழில்இறைத்தஜலம்போல்உமக்குப்
பரிசளிக்காவதுண்டோ துரைதீர்ப்புப்
பண்ணுவதும்மைக்கொண்டோ வெட்கமின்றி
ஏழைகளிடத்தில்கைக்கூலி வாங்க
இச்சைகொண்டீரென்னகேலி-வங்கி
ஞூழமேபலபலசோலி நிஜம்
துரையறிந்தால்உங்கள்உத்தியோகம்காலி — ஏதுக்கு

4. உழக்கிற்கிழக்குமேற்குண்டாக்கிஒருக்காலே
நூரைப்பூட்டுகிறீர் விவாதிக்கும்
பேரைமருட்டுகிறீர் நிச்சயமுண்டோ
வழக்குச்சேற்றினில்நட்டகம்பம்பிச்சை
வாங்கியும்உமக்கென்னடம்பம்-ஞாயம்
இழக்கின்றபேர்படுந்துன்பம் உமக்
கிசைந்திடுஞ்செல்வத்தை அழித்திடும்ரம்பம் — ஏதுக்கு

5. சிலையில்நார்உரிப்பதுபோலே எவரையும்
திட்டமாளத்துகிறீர் கைகளில்-அகப்
பட்டதைச்சுற்றுகிறீர் பெரிதான
மலையோஉமதுகாயஸ்தூலம்-நீர்தாம்
வாழ்வதுண்டோகோடிகாலம் ஊரில்
கொள்ளைகளவர்கள்விசாலம் ஆனால்
கொடுக்கவேண்டுமுந்திஉமக்குத்தாம்பூலம் — ஏதுக்கு

6. ஆசைகறந்தெனவாடும்பஞ்சைகளிடம்
அடிக்கிறீர்சர்வகொள்ளை உமைவந்து
பிடிக்குமேபெரியகள்ளை வாங்கினபின்பு
போடுகிறீர்பட்டாராமம்-ஒரு
பொதுவ்விடிவுமோக்ஷாயம் உமை
நாடிமிஞ்சாதொருசேரமம் வேத
நாயகன்சொற்கேட்டால் உமக்குண்டுக்ஷேமம். — ஏதுக்கு

---

## இதுவும் அது

174 இராகம்-பியாகடை-சாபுதாளம்.

பல்லவி.

ஆர்வேணுமோ அவர் வாங்கட்டும் லஞ்ச
ஆசைவையாதே நெஞ்சே

அநுபல்லவி.

சீர்வளருங்குளத்தூரெனும்பதிஉள்ளார்
செல்வன்வேதநாயகன் சொல்லும்உரையைக்கொள்ளார்

சரணங்கள்.

1 சம்பளமிருக்கப்பின் மேல்வருமானம்
தலைதாழ்வென் அதன் மேல்நித்திபதானம்
அம்புவிமிசை விளைந்திடும்அவமானம்
அதைவிடஎடுக்கலாமோஉபாதானம்
அஞ்சிடும்பல பஞ்சையோர்களையேநிதம்துன்பஞ்செய்து
மிஞ்சவேஅவர் லஞ்சமேதர
வஞ்சமேபுரி பஞ்சபாதகர் ஆர்

2 கக்ஷிக்காரருக்குன்னால் ஏதுபகாரம்
கனதுரைதீர்ப்பான் தன்மனதுப்பிரகாரம்
ரட்சிப்பேனெனப்பொய் சொல்வதில்என்னசாரம்
லஞ்சமென்பதுபட்டப் பகலிற்செய்சோரம்
ரத்னராசியும்அர்த்த நாணயமுந்தந்தால் உன்காரியம்
சித்தியென்றுப யத்திராஜையும்
எத்திவாங்கிடும் உத்தியோகர்கள் ஆர்

3 அயலார்பொருளின்மேல் நமக்கென்னசொந்தம்
அகதியைமடிபிடித் தேன்பலவந்தம்
இயலவாங்கிக்கெட்ட குடிகள் அனந்தம்
இகபரம்போம்வரும் நரகநிர்ப்பந்தம்
இக்கணத்தில்உன்பக்கமாகிடவே செய்வேன்தர்தாவென்று
அக்கிரமத்தில் அலைக்கழித்து
வழக்கைத்தொடர் துர்குணாத்தர்கள் ஆர்

4 ஒருகாசாகிலும் வாங்குதல்துரோகம்
ஊர்கொள்ளை அடிக்கவோ உனக்குத்தியோகம்
தருபவர்க்கென்ன உன்றனாலேநிர்வாகம்
தனதுக்கேன்செய்கிறாய் நீபிராணத்தியாகம்
சட்டம்மீறிபுரட்டி சாரியையேதினம் தெட்டித்தங்கக்
கட்டிவெட்டி உருட்டி ஒட்டிய
பெட்டிகொட்டி மருட்டுமெட்டிகள் ஆர்

---

## பிரபுத்துவ தூஷணம்

175 இராகம்-கன்யாசி-ஆதிதாளம்.

பல்லவி.

ஓஓபிரபுத்துவமே தினமும்
உன்றனால்கன உபத்திரவமே

அநுபல்லவி.

காவலர்பூமியில என்னிடத்துன்தொழிலைக்
காட்டாதே என்னைவாட்டாதே

சரணங்கள்.

1 அன்னத்தைக்கண்டால் விஷம்போல்வேப்புபோல்
அருவருத்துன்னைத் துணிவாய்
ஆயிரம்பக்குவஞ்செய் தொருவாய்சாதம்உண்
டாலும் ஜீரணியாய்
என்னத்துக்கிந்த அன்னமென்றென்னி ஏழைகளுக்
கீந்தவர்பசி தணியாய்
இறுமாப்போதிமிர் வாதமோ
ஈசன்வந்தாலும் எழுந்துபணியாய்

2 பார்க்கச்சகியா அஞ்சர்ணர் அழகரென்று
பலருந்துதிக்கவிதிப்பாய்
பலசாலிநானென்று தள்ளிக்கொண்டுசெத்த
பாம்பையுமே மிதிப்பாய்
ஊர்க்குள்எவருஞ்சொல்லும் நிந்தனையை அறியாமல்
உன்னையே நீதுதிப்பாய்
உண்மைசொல்வோரைத்தள்ளிப் பொய்சொல்லுவோர்கள்
உற்றவரென்றுமதிப்பாய்

3 காரியமில்லா வீண்டம்புவிஷயத்தில்
காசெல்லாஞ்செல வழிப்பாய்
காலத்தையும்உனது காயத்தையும்விஷய
காமத்திலேகழிப்பாய்
பாரில்சுகம்எளியராலென்று நினையாமல்
பாவிஅவரைப்பழிப்பாய்
பத்துப்பேர்நித்தம் உனைதாங்கஇல்லாவிட்டால்
பாக்கபாக்கவிழிப்பாய்

4 பாலையும்விஷஞ்செய்யும் பாழ்புபோற்சுகமெல்லாம்
பாழாக்கிக்கெடுப்பாய்
பலநோய்களுக்கிருப்பிடமாய் வைத்தியர்
பலருக்குவேலை கொடுப்பாய்
காலையுமாலையிங் காரணமின்றிக்கடு
கடுத்துநீ சிடுசிடுப்பாய்
கைப்பொருள்போனால் ஒருவேலையுந்தெரியாமல்
கையிலேஓடெடுப்பாய்

5 சீமையிற்கவிசொல்லக் கம்பனும்நிகரல்லச்
சேஷன்நானென்று விரிப்பாய்
சேஷனீயென்பதற்குச் சாட்சியாகவிஷத்தைத்
தேகமுழுதுந் தரிப்பாய்
ஊமைக்குளறுவாயன் சண்டப்பிரசண்டனென
ஓயாமல்விவகரிப்பாய்
உயர்கவிஞரைக்கண்டால் ஒன்றும்பேசாமல்நீ
ஓட்டத்தையனுசரிப்பாய்

6 பெருநொண்டிபோல்உனைத் தூக்கச்சொல்லிப்பல
பிராணிகள்கழுத்தொடிப்பாய்
பெருந்தொழில்செய்து களைத்தவன்போல்உடம்பெல்லாம்
பிடிக்கச்சொல்லி அடிப்பாய்
அரும்பலசாலிநான் தூக்கிவிட்டால்பிணக்கா
டாக்குவேனென்று நொடிப்பாய்
ஐயன்வேதநாயகன் அடியைமறந்துபெண்கள்
அடிகளையே பிடிப்பாய்

# குடும்பசம்பந்தக்கீர்த்தனைகள்

## தாய்தந்தையரை நமஸ்கரித்தல்.

---

176 இராகம் பியாகு-ஆதிதாளம்.

கண்ணிகள்.

1 உற்றவரேஎன்னைப் பெற்றவரே தினம்
உமக்கேநமஸ்காரம்
முற்றுமேநீர்செய்த உதவிக்குநான்என்ன
மொழிவேன் உபசாரம்

2 பத்துமாதம்என்னை வயற்றிலேசுமந்து
பலதுயர்சகித்தீரே
எத்தனைபிராண சங்கடமுடனென்னை
ஈன்றுநிர்வகித்தீரே

3 பெற்றீர்வளர்த்தீர் பெயருமிட்டீர்ஜீவப்
பிரதிஷ்டைசெய்வித்தீரே
உற்றஉம்உதிரத்தை முலைப்பாலாகவே
ஊட்டியேஉய்வித்தீரே

4 தேனினும்அமிர்தினும் இனிதெனக்குநீர்
செப்பியதாலாட்டு
வானினும்அமரர்க்கு வருமோஇதுபோல்
மங்களத்திருப்பாட்டு

5 மாந்தவியாதிகள் என்னை அணுகாமலே
மருந்துகள்கொடுத்தீரே
வாந்தியும்மலசல மூத்திரமுஞ்சகித்தென்னை
மார்புறஎடுத்தீரே

6 உடல்உயிர்சகலமும் நீர்தந்ததேயன்றி
உண்டோஇனிவேறு
அடரும்உலகெலாம்
ஆமோகைம்மாறு

7 சிவன்போல்நீர்என்னை வளர்த்திட்டஅருமையைச்
செப்பஎன்னால்ஆமோ
நாவேஆயிரம் இருக்கினும்நீர்செய்த
நன்மையைச்சொல்லப்போமே

8 கவலையெல்லாம்என் கவலையல்லால்வேறு
கவலையென்றறியீரே
புவியிலேஎன்சுகம் அல்லதுவேறொரு
பொருளையுங்குறியீரே

9 பாலவியாதிகள் எனையணுகாமலே
பயித்தியம்பிடித்தீரே
காலமெல்லாம்பல விரதங்கள் அநுஷ்டித்துக்
கருமங்கள் முடித்தீரே

10 இரவுமுழுதுமே தூங்காதிருந்துநீர்
எந்தனைக்காத்தீரே
அரவுமுதற்பல ஜெந்துக்களால்வரும்
ஆபத்தைத்தீர்த்தீரே

11 தரணியில்என்சுகம் வேண்டியேநீர்பல
தருமங்கள்செய்தீரே
கருணைசெய்யும்படி கடவுளைத்துதித்துநற்
காணிக்கை பெய்தீரே

12 சற்றுநீர்என்னைமுன் மறந்திருந்தால்நான்
சடலம்பெருப்பேனோ
உற்றஉலகிலே இந்நாள்மட்டும்நான்
உயிர்வாழ்ந்திருப்பேனோ

13 காணுந்தெய்வத்தின் அருளாலேவந்த
கண்கண்டதெய்வம்நீரே
ஆணுப்பெண்ணுயிரா அந்தத்தேவையும்
அன்னைதந்தை என்பாரே

14 எனக்கொருசுகம்வரில் உமக்கிவந்ததுபோல
எக்களிப்படைந்தீரே
எனக்கொருதுயர்வரில் உமக்குவந்ததுபோல்
ஏங்கிஉள்ளுடைந்தீரே

15 பாலுஞ்சோறும் பக்ஷணங்களுமெனக்கிட்டு
பழஞ்சோறுண்டீரே
காலமெல்லாம்நல்ல சேலைஎன்உடுக்கநீர்
கந்தையைக்கொண்டீரே

16 சப்பிரமஞ்சத்தில் நான்படுத்துறங்கநீர்
தரையிலேபடுத்தீரே
கைப்பொருளெல்லாம் என்னிமித்தம்பரி
காரிக்குக் கொடுத்தீரே

17 வாக்காலுளறும்என் மழலைச்சொற்கேட்டுநீர்
மகிழ்ந்தேதுதித்தீரே
காக்கைக்குந்தன்குஞ்சு பொன்குஞ்சென்பதுபோல்
கரிசனப்பதித்தீரே

18 குற்றம்எத்தனையோ செய்தேன்அவற்றைக்
குணமாய்க்கொண்டீரே
சற்றுநான்நோய்கொள்ளில் அன்னம்நித்திரையின்றித்
தளர்ந்துமெய்த்துவண்டீரே

19 தோளினும்மார்பினும் இடையினுமேயெனைத்
தூக்கிக்கொண்டலைந்தீரே
நீள்பஞ்சகாலத்தில் உள்ளசோறெனக்கிட்டு
நீர்பசித்தலைந்தீரே

20 சுபலம்வேண்டி இங் கொருவருக்கொருவர்
துணைசெய்வர்மெய்தானே
பயனென்றும்வேண்டாதெனைநீர்வளர்த்திட்ட
பக்ஷமென்சொல்வேனே

21 உறவினரெல்லாம் உம்மாலேவந்த
உறவினர்தாமல்லோ
அறநெறிகாட்டும் குருவுமேநீரெனில்
அயலினிஎன்சொலவோ

22 பலபொருள்எனக்குச் சம்பாதித்துவைக்கவே
பலவிதம் உழைத்தீரே
நிலமிசைஉம்முயிர்க் குயிர்நானேயென்று
நினைத்துநீர் பிழைத்தீரே

23 தாரம்போனால்மறு தாரம்வருவர்பெற்ற
தநயரும் அப்படியே
நீர்போனால்வேறு தாய்தந்தையர்வருவது
நேருவதெப்படியே

24 தக்கபருவத்தில எனை அடக்கிடப்பாட
சாலையில் விட்டீரே
பக்கமெல்லாந்திரிந் தென்றலேபல
பாடுகள்பட்டீரே

25 இளந்தைப்பருவத்தில் என்னால்வருந்துன்பம்
எல்லாம்பொறுத்தீரே
தளர்ந்தபருவத்தில் உம்மால்வருந்துன்பம்
சகிப்பதுபெருஞ்சீரே

26 துக்கங்களெல்லாம் நிர்வகித்துக்கொண்டு
சுகம்எனக்களித்தீரே
மக்களே சகலபாக்கியமென்றெண்ணி
மனம்மிகக்களித்தீரே

27 மண்பிள்ளையாயினும் தன்பிள்ளையென்றெனை
மகிழ்ந்தாதரித்தீரே
பண்புடன்என்பொருட் டாகநீர்பலரையும்
பணிந்துபசரித்தீரே

28 தெரியாமல்நான்செய்த பிழைபொறுத்தென்னிடம்
திருவருள்பதிப்பீரே
அரும்வேதநாயகன் அருள்செய்யும்படிஎன்னை
ஆசீர்வதிப்பீரே உற்றவரே

## தகப்பன்மகனுக்குப் புத்திகூறல்.

177 இராகம்—மோகனம-ஆதிதாளம்

பல்லவி.

மார்க்கம்இதுமகனே சந்திரன்
தோற்கும்எழில்முகனே சன்

அநுபல்லவி.

மூர்க்கருடனே உறவாடாதே-பழி
மூண்டிடும்சூது விளையாடாதே-இந்தப்
பார்க்குள் ஒருபொய்சொல்லக்கூடாதே-மது
பானம்விரும்பிமனம்வாடாதே-சன்

2 மாதாபிதாக்களை மகிழ்ந்துநீதாங்கு
பண்ணில்நல்ல பிள்ளையென்றுபேர்வாங்கு
தீதுகள் உனக்குச்செய்தோர்க்குமேதீங்கு
செய்யாமலிருப்பது திருவுளப்பாங்கு

3 ஞானபுஸ்தகங்களை நாளும்நீவாசி
நல்லவருடன்கூடி நாதனைநேசி
ஈனர்தமக்குஞானமேஉபதேசி
என்றுங்குணவதியேமகராசி — புத்

4 உயிர்போனாலும்நீஒருபொய்சொல்லாதே
உன்வீடுகடந்தயல்வீடுசெல்லாதே
பயில்மறுபுருஷர் பார்க்கநில்லாதே
பாவத்தைக்கனவிலும் நினைத்தல்பொல்லாதே

5 அம்புவிழியே அறங்கைவிடாதே
அற்பப்பொருள்விரும்பி ஐயோகெடாதே
வம்புக்காரிகளுடன் வார்த்தைகொடாதே
மற்றவர்பொருளைக்கண்டாசைப்படாதே — புத்

6 வாழ்வுவந்தாலும்நீ மயங்கித்துள்ளாதே
மற்றவர்இழிவைஉன் வாயால்விள்ளாதே
தாழ்வுவந்தாலும்நீ சலித்துக்கொள்ளாதே
சகலமும்பரன்செயல் தடுத்துத்தள்ளாதே. — புத்தி

7. மாமிநாத்திகளைமதித்துறவாடு
மகளுந்தாயும்போலேமகிழ்ந்துநீகூடு
சாமியாகுங்கணவன்தயவைநீதேடு
தலையணைமந்திரம் ஓதுதல்கேடு. — புத்தி

8. தப்பாமல்எளியரைத்தாங்கிக்கைதூக்கு
தானதருமம்ஜெபதபத்தில் நாள்போக்கு
கைப்பாகத்திலேஉன்கணவனூர்மூக்கு
கம்மென மணமேறக் காய்கறியாக்கு, — புத்தி

9. விடியுமுன்எழுந்துநீ வேலையைநாடு
வீட்டைக்கண்ணாடிபோல் விளக்கிக்கையாடு
உடலும்ஆடையும் அழுக்கொழியநீராடு
உடலும்பெருக்கத்தீனி உண்பதுங்கேடு. — புத்தி

10. சொந்தவேலைகள்செய்யச் சோம்பிநையாதே
துன்பஞ்செய்தவர்க்குமீ துன்பஞ்செய்யாதே
வந்தஎளியவரை வாட்டிவையாதே
மாவேதநாயகன் வார்த்தைபொய்யாதே. புத்தி

## உத்தமஸ்திரீயின் லக்ஷணம்.

### 179. இராகம்-சாரங்கா-ரூபகதாளம்.

பல்லவி.

எவளோ அவளே குலநாரி அவள்
இகபரம் இரண்டுக்கும்உபகாரி. எவளோ

அநுபல்லவி.

அவனி தனை விதிக்கும்-ஆண்டவனைத்துதிக்கும்
அனகபூஷணி-அமிர்தபாஷணி
சனகதூஷணி-கலகதுவேஷணி. எவளோ

சரணங்கள்.

க- நித்திரையிலுங்கணவன் தியானம்-என்றும்
நீங்காசபெரியஅபிமானம்.
பத்தினிகளுக்கெல்லாங்குருஸ்தானம் அவள்
பரபுருஷருக்கு மாதாசமானம்
சத்தியப்பொறை இருள்-சாந்தம்அவட்குப்பொருள்
தர்மரஞ்சனி-சமயரஞ்சனி
கர்மபஞ்சனி-கனநிரஞ்சனி. எவளோ

2. உத்தமகுணங்களே ஆபரணம்-ரத்ன
ஒலைமுதல்நகைகள் ஒருதிரணம்
பத்தாவைப்பிரிவது வேமரணம்-வரும்
பந்துஜனங்கட்கெல்லாம் ஆதரணம்
சுத்தசித்தம்உடையாள்-தூய அன்னநடையாள்
துதிகொள்சுந்தரி-சுபநிரந்தரி
மதியில்மந்திரி-வசனதந்திரி. எவளோ

3. சந்திரபிம்பம்போலுந்திருமுகமே-அவள்
தரிசனம்பிரமானந்தசுகமே
எந்தவேளையுமிருதுவாசகமே-சீலம்
சவால் அருந்ததிக்கும் யாசகமே
வந்துதனை அடுக்கும்-வறியர்க்கெல்லாங்கொடுக்கும்
மலநிவாரணி-வடிவபூரணி
குலசிரோமணி-குணஉதாரணி. எவளோ

4. குணஅழகொன்றுலக்ஷாந்தரமே-கொல்லுங்
கொடுவிஷம்குணமில்லாள் சுந்தரமே
உணர்வில்லாள்விடுவனாந்தரமே-ஞானம்
உத்தமிக்கென்றுஞ்சுதந்தரமே
அனுதும்பர்த்தசுரூபம்-அவட்குத்திவ்யசொரூபம்
அதிசயவதி-அமிர்தகிரணமதி
புதியசுபகதி-புருஷர்தவநிதி. எவளோ

5. சாலமுந்தெரிந்த வித்தியாதீபம்-என்றும்
தலைவன்றனூழியமே காலக்ஷேபம்
பகரவொண்ணாமகிமைப் பிரதாபம்-அவள்
பாக்கியங்கணவன் பிரியசல்லாபம்
நிகரில்வேதநாயகன் நேசமேபேசுஞ்சுகம்
நித்தியநவமணி-நிகர்வகுண அணி
அதிகவிசாரணி-அரியகிரகணி. எவளோ

## பெண்பார்க்கத் தூது அனுப்புதல்

180 இராகம்-உசேனி-ஆதிதாளம்.

பல்லவி.

நல்லபெண்ணைப்பார்நீ தூதா
நல்லபெண்ணைப்பார்நீ தூதா நல்ல

அநுபல்லவி.

அல்லடாகேள் இந்தப்பூமியின்மேலே
அபிராங்காலத்தப் பரிசாரணையாலே. நல்ல

சரணங்கள்

1. அதிகபேச்சுக்காரி பெரும்வம்பி
ஆயிரமானாலும் அவள்வேண்டாந்தம்பி
நிதம்நிதம்ஊரெல்லாம் நீட்டுவாள்கம்பி
நிசசயம்அவள்ஆகாள் நீஎஞ்சொல்லி நல்ல

2. எழுத்துவாசகம் அறியாதவள்மட்டி
ஏதும்அறியாள் சுரண்டுவாள்சட்டி
கழுத்திலேஅவளுக்கு தாலியைகட்டி
காரியமிலேஅது காசுக்குநஷ்டி நல்ல

3. அழகுங்குணமுமுள்ளவள் நல்லஜோடு
அழகில்லையாயினும் குணத்தையேதேடு
பழகுநற்குணமில்லா அழகியின்வீடு
பாம்புபுலிகரடி வாழ்ந்திடுங்காடு நல்ல

4. வீட்டுவேலைதெரியாதவள்வேம்பு
மினுக்கும்அவள்குலுக்கமே வெறும்வீம்பு
கூட்டுநற்குணமில்லாக் கொடியவள்பாம்பு
குலத்தைக்கெடுக்கவந்த கோடாலிக்காம்பு நல்ல

5. நகைகள்தரித்துமஞ்சள் வாடைகள்பூசி
நாடெங்குந்தெரியவே நகைத்துக்கைவீசி
சொகுசுடன்நடப்பவள் ஆயிரந்தாசி
சும்மாவந்தாலும் அவள்வேண்டாம்சீசீ நல்ல

6. தேவதாபத்திஇல்லாதவள்கள்ளி
திருட்டுக்கும்புரட்டுக்கும் அவள்ஒருபள்ளி
தாவில்புருஷன்குடிக்கவள் பெருங்கொள்ளி
சனியனைவிலைக்குவாங்காமல்நீதள்ளி நல்ல

7. உடைமைகளுடன்பணங் காசின்மேல்யிச்சை
உள்ளவள்சண்டைக்குக் கட்டுவாள்கச்சை
இடைவிடாமல் கெடுமேஎன்லச்சை
இவளைக்கொள்ளுவதிலும் எடுக்கலாம்பிச்சை நல்ல

8. சந்ததங்கணவன்மேல்ஒழியாப்பத்தி
சாந்தம்பொறுமைதயை தானம்நற்புத்தி
எந்தவேளையும்உடல் ஆத்துமசுத்தி
இல்லாதவள்அவன் கழுத்துக்குக்கத்தி நல்ல

9. நல்லவள்ஏழையானாலுங்கட்டாதே
நானாறுபோனாலும் நீயின்னிடாதே
பொல்லாதவள்கையில் காட்டிக்கொடாதே
புலியைக்கொண்டுவந்ததைனைத் தெருவில்விடாதே — நல்ல

10. சகலகாரியமுந்தெரிந்தவள்சிலாக்யம்
தந்திரதசையிலும்அவளிபெரும்பாக்கியம்
இகபரம்இரண்டுக்கும் அவளேயோக்கியம்
என்றுசொன்னான்வேத நாயகன்வாக்கியம். — நல்ல

---

## தூதன் பெண்பார்த்துவந்து சொல்லல்

181. இராகம்-சௌராஷ்டிரம்-அட தாளம்-சாப்பு

பல்லவி.

பஞ்சவர்னக்கிளிபோல் ஒருபெண்ணைநான்
பார்த்துவந்தேன் சாமி. — பஞ்ச

அநுபல்லவி.

கொஞ்சமுஞ்சந்தேகமில்லாமலே அந்தக்
கோலமயிலைநீர்கொள்ளும்
அநுகூலமாய்வந்ததென் றதுள்ளும்-நல்ல
காலம்கவலையைத்தள்ளும். — பஞ்ச

சரணங்கள்.

1. பூரணசந்திரன்போலும்முகத்திற்குப்
பூமியிலுண்டோசமானம்-தெய்வப்
பூவையர்சுந்தரம்வேண்டில்அவளிடம்
போய்வாங்கவேண்டுமேதானம்-அந்த
நாசிகண்வாய்செவி மூக்குக்குவமையை
நாட்டுவதுமறியேனம்-அவள்
நடையழகுக்கும் சடையழகுக்குமே
நான்என்னசொல்வேன்உபமானம்-அந்த
மானின்சொல்லேதேவகானம்-இடை
தானுண்டென்பதனுமானம்-நாற்றம்
மீனக்கண்ணெனில் அவமானம். — பஞ்ச

1. பாக்கியவதி அவள் பக்கத்திருந்தாலும்
பாவமெல்லாம்பறந்தோடும்- அவள்
பால்வடியும்முகம்பார்த்தாலும்போதும்சௌ
பாக்கியம்வந்துவிளையாடும்-திரு
வாக்கால்அவள்மழைபெய்யென்றால்பெய்யுமே
வர்ணிக்கயாராலேகூடும்-கிட்டி
வந்ததுமக்குத்துரந்தரயோகம்
வருத்தத்தைநீர்தள்ளிப்போடும்-இனிக்
கருத்தில்அவளைப்போடும்-மிகு
திருத்தமாகக்கவிபாடும்.நல்ல
பொருத்தம்ஆனந்தக்கூத்தாடும். பஞ்ச

3. வெள்ளியும்தங்கமும் அள்ளிக்கொடுத்தாலும்
வேறொருவர்முகம்பாராள்-நல்ல
மேன்மைத்துரைமகள் ஆனாலும்விட்டு
வேலைக்குப்பின்னிட்டுச்சோராள்நிதம்
தள்ளிநீர்வைத்தடித்தாலும்கைகோகுமே
சாமிஎன்றுதொழுஞ்சீராள்பெற்ற
தாய்தகப்பன்அழைத்தாலும் உமைவிட்டுச்
சற்றும்பிரிந்திடநேராள்-பசும்
தற்றநவமணிநேராள்-நாளும்
குற்றமுள்ளோர்சபைசேராள்-செய்த
நற்றவத்தால் அன்றிவாராள். பஞ்ச

4. காரியம்பார்ப்பள் கணக்குமெழுதுவள்
காய்கறியாக்கவும்கெட்டி-அவள்
கைபட்டால்வேம்புங்கரும்பல்லவோருசி
கண்டுநீர்மண்டுவீர்சட்டி-அவள்
ஊரிலேமாமியார்நாத்திமாரெல்லாம்
உவந்திடுகற்கண்டுக்கட்டி-தினம்
ஓயாதிருந்துவந்தாலும்சலியாமல்
உண்ணச்சொல்வாள் அன்னங்கொட்டி-அந்த
வண்ணக்குமிழ்நீர்மட்டி-இரு
கண்ணிற்கண்டாற்படும்திட்டி-துரை
பெண்ணைக்கொள்ளாயென்ன அட்டி. பஞ்ச

8. நீர்மகிழ்ந்தால்அவள் தான்மகிழ்வாள் துன்பம்
நீர்கொள்ளில் அவட்கும்விசாரம்-அன்னம்
நீர்உண்ணில் அவள்பசிதீரும் இருவர்க்கும்
நிச்சயம்ஏகசரீரம்-இந்த
ஊரில்நீர் இல்லாதபோது றங்காள் அன்னம்
உண்ணாள் பண்ணால் அலங்காரம்-நீர்
ஊமைகுருடரானாலும்செய்வாள் உமக்
குரிமையாய்ராஜோபசாரம்-ஆனால்
பரமாதருடன் நீர்சஞ்சாரம்-செயில்
வரும்அவளுடையநிஷ்டூரம்-அதற்
கொருநாளும்இலைபரிகாரம். பஞ்ச

9. பாவம்நீர்செய்யச்சொன்னாலும் செய்யாள்வேறே
பண்ணாள் உனக்கபசாரம்-பெறும்
பாலர்க்குநல்வழிகாட்டித் தினமும்
படிப்பிடிப்பாள்வேதாந்தசாரம்-வந்து
தாவும்எளியவர்க்கில்லைஎன்னாமலே
தாய்போல்செய்வாள் உபகாரம்-செல்வம்
தாழினும்ஏழைக்குத்தான்உண்ணும்அன்னத்தைச்
தந்துமெலிவாள்-சரீரம் சம
யந்தியுமேநமஸ்காரம்-செய்யும்
சுந்தரிசீலம்விஸ்தாரம்-உமக்
கந்தமின்னேநல்லதாரம். பஞ்ச

10. பாயும்படுக்கையுமாக நோய்கொண்டாலும்
பர்த்தாவேலைக்குப்பின்வாங்காள்-உந்தன்
பக்ஷம்ஒன்றேகோடிலக்ஷம் என்றெண்ணிப்
பலதுன்பம்வந்தாலும்எங்காள்-பெற்ற
தாயும்பிதாவும்நிகர்வேதநாயகன்
தாமரைப்பாதத்தைநீங்காள்-நல்ல
சத்தியநிரந்தரைபுத்தியின்மந்திரி
சட்டக்குடித்தனப்பாங்காள்-வேலை
முட்டமுடியுமுன் தூங்காள்-என்றும்
கெட்டவள்என்றுபேர்தாங்காள்-உமக்
கிஷ்டமுள்ளான்பழி ஓங்காள். பஞ்ச

# தலைவியிடத்துவைக்க வேண்டியநேசத்தைப்பற்றித் தலைவன்கூறுதல்.

182. இராகம்-சௌராஷ்டிரம்-அடதாளம்-சாப்பு.

பல்லவி.

பத்தினிபோல்நமக் கித்தரைமீதினில்
உற்றவர்யார்மனமே. பத்தினி

அநுபல்லவி.

சத்தியமாகவே தாய்ப்பின் தாரம்
தாரத்தினால்அல்லவோ சமுசாரம் பத்தினி

சரணங்கள்.

1. இல்லாளும்நாமுமே ஏகசரீரம்
என்பதுவேதமனுநீதியின்சாரம்
நல்லவளே நம் மனைக்கலங்காரம்
நாட்டிலேமற்ற உறவெல்லாந்தூரம். பத்தினி

2. கைப்பொருள் இல்லாவிட்டாலும்நற்பாரி
கைவசமானால் அவளேபொன்மாரி
எப்பொருளும் இருந்தாலும்ஓர்நாரி
இல்லாதவீடு தண்ணீரில்லாஏரி. பத்தினி

3. பெண்ணென்றாற்பேயும் இரங்குமென்பாரே
பெண்ணை அடித்தால் வருங்கெட்டபேரே
கண்ணை இமைகாப்பதுபோலநேரே
காதலிதன்னைக் காப்பாற்றுதல்சீரே. பத்தினி

4. பந்துஜனமெல்லாம் வீண்பரிவாரம்
பாரில்அவரால்உண்டோஉபகாரம்
அந்தரந்தன்னில உதவுவாள்தாரம்
ஆபத்துவேளைக் கவளேஆதாரம். பத்தினி

5. தாய்தந்தையாரையும் விட்டுவந்தாளே
சமசாரபாரத்தைத் தாங்கிநைந்தாளே
நோய்சூல்பிரவசந் தன்னில்நொந்தாளே
துன்பத்தைத்தான்கொண்டு சுகத்தைத்தந்தாளே. பத்தினி

## தலைவனுடையமேன்மையைத்தலைவி தோழிக்குக் கூறுதல்,

கடு83. இராகம்-பிலகரி-திரிபுடை-தாளம்.

பல்லவி.

நாயகர்பக்ஷமடி எனக்கது
ஆயிரமலக்ஷமடி. நாயகர்

அநுபல்லவி.

நீயறிவாயே அர்குணவமானே
நாயறியுமோ ஒருசந்திப்பானே. நாயகர்

சரணங்கள்

1. பத்தாவின்பக்ஷம் உள்ளான்மகராசி
பத்தாவின்பக்ஷம் இல்லாள்பரதேசி
வித்தாரமாகத் திரவியராசி
மேன்மேலிருந்தும் பலனென்னசீசீ. நாயகர்

2. ஏழையானாலும் எனக்கெசமானே
என்னும்அடிமை அவருக்குநானே
கூழைஉண்டாலும்உனக்கதுதேனே
கொண்டார்இருக்கக் குறையென்னமானே. நாயகர்

3. மாலைபொன்னோலைகள் வண்ணமுத்தாரம்
மற்றநகைகளெல்லாம் பெரும்பாரம்
சீலமுங்கற்புமே தேகசிங்காரம்
திவ்யமாணிக்கத்துக் கேன் அலங்காரம் நாயகர்

4. ஆயிரந்துன்பங்கள் வந்தாலும்நானே
ஐயர்கிருபைஉண்டானால் அஞ்சேனே
பாயேர்பிடித்தவன் என்னசெய்வானே
பாணிபிடித்தவள் பாக்கியந்தானே. நாயகர்

# துன்பஞ் செய்தாலும் தலைவனே கதியென்று தலைவி தோழிக்குச் சொல்வது.

---

184. இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

அடித்தாலும்வைதாலும் அவரே துணையல்லால்
ஆர் துணையடிமானே. அடி

அநுபல்லவி.

மடித்தாலும்அவருடன் வாய்மதமிஞ்சலாமோ
வனத்தின்கிழிருந்து மழையிடிக்கஞ்சலாமோ. அடி

சரணங்கள்.

௧. குற்றங்குறைகள்கண்டால் கொண்டவர்பொறுப்பாரோ
குணமாகநாம்நடந்தால் கோபித்துவெறுப்பாரோ
இற்றைக்குச்சொல்வோரெல்லாம் என்கடன்இறுப்பாரோ
இழவுக்குவந்தவரெல்லாந் தாலியறுப்பாரோ. அடி

2. அடிக்குமொருகை அவரணைப்பதும்ஒருகையே
அழுதழுதுப்பிள்ளை அவள்பெறவேண்டுமெய்யே
இடிக்குங்கணவருடன் எதிர்த்தால்வாழ்வதும்பொய்யே
எரிகிறநெருப்பிலே இடலாமோபின்னும்நெய்யே. அடி

3. என்னஅவர்சொன்னாலும்எதிர்மொழிவிள்ளலாமோ
எரியும்அக்கினிதன்னை இருகையால்அள்ளலாமோ.
சின்னமதியாலேநம் செவத்தைத்தள்ளலாமோ
தின்கிறசோற்றில் மண்போட்டுக்கொள்ளலாமோ. அடி

4. நன்மையாகநடந்தால் நமக்குண்டாமவர்நேயம்
நல்உத்தமிர்க்கெந்த நாளுந்தெய்வசகாயம்
செல்வம்உள்ளவீட்டுக்குஞ் சேருமோஓர் அபாயம்
சிவனுடனும்பேற்ற சேர்ந்துவாழ்வதுபாயம். அடி

5. ஆனைகட்டச்சங்கிலிநாள் எடுத்துக்கொடுக்கும்
அப்படிப்போலநமது வாயேநம்மைக்கெடுக்கும்
ஞாயமாகநடந்தால்நன்மைஎல்லாம்அடுக்கும்
நல்லவள்தெய்வமென்று நாடெல்லாங்கையெடுக்கும். அடி

6. மதயானைமேலெடுத் தெரியலாமோமண்ணுண்டை-
மணவாளர் இடத்திலே வளர்க்கலாமோசண்டை-
முகலாமை இல்லாவிட்டாள் மூத்தவளே நம் அண்டை-
மொட்டைதலையிலேநாம் முடிக்கலாமோகொண்டை அடி

## தலைவன் செய்த நன்மையைத் தலைவிகூறல்.

185. இராகம்-அசாவேரி-திரிபுடைதாளம்.

பல்லவி.

எத்தனை ஆனாலும்-பத்தாவைப்போலெனக்
கிசைந்தவர் ஆரடி எத்தனை

அநுபல்லவி.

வித்தாரக்கள்ளினீ விண்வம்புபடியாதே
ஒத்துவாழாக்குடி ஒருநாளும்விடியாதே எத்தனை

சரணங்கள்.

1, மாணிக்கச்சிலைபோலப் பெண்கள்பலரிருக்க
மானே அவரையெல்லாம்விட்டாரே
மைத்துனியேசொந்தப் பத்தினியென்றென்னை
மாலையிடஉடன் பட்டாரே
காணிக்கையாசநான் புத்தியறியுமட்டும்
காத்திருந்தென்னைக்கைக தொட்டாரே
கால்முதல்தலைமட்டும் பொன்காய்த்தமரம்போலக்
கனத்துநகைகளெல்லாம் இட்டாரே
ஆணிப்பொன்னே அறி யென்னான்ஒருகஷ்டம்
அத்தானால் அல்லவோ எனக்கித்தனை அதிர்ஷ்டம்
பாணிகிரகணஞ்செய் தவருடனே இஷ்டம்
பாராட்டினால்நமக் குண்டோ ஒருநஷ்டம் எத்தனை

2· தங்கக்கிண்ணியில்சோறும் வெள்ளிக்கிண்ணியில்பாலும்
சட்டம்சட்டமாக உண்டேனே
தாதியர்கால்பிடிக்க மேல்மாடியில்நல்ல
சப்பிரமஞ்சத்துயில் கொண்டேனே

அங்கமாய்மான்ஏற வண்டிபல்லக்குகள்
அற்பவருத்தமும் அண்டேனே
அன்னத்துக்கில்லாமல் என்றுநொந்தபெண்கள்
அதுதுவலியன்குத்தக் கண்டேனே
மங்களமாகவே சிங்காரமனைக்கட்டி
வகைவகையாஉடுக்க ஜெகமோகனப்பட்டு
எங்கும்பஞ்சமானாலும் எனக்குண்டோஒருதட்டு
இத்தனைபாக்கியம் எல்லாம்அவரைத்தொட்டு    எத்தனை

3. கோபம்உள்ள இடத்தில் குணமும் இருக்கும்அவர்
கோபித்தோர்வார்த்தைசொல்ல லாகாதா
கொண்டவர் இடத்திலே நிண்டுமிண்டுஞ்செய்தால்
கோதையேகுடிகெட்டுப் போகாதா
சோபனஞ்செய்தெனைக் காத்தவர்மேலொரு
தோஷஞ்சொன்னாலும்வாய் வேகாதா
சூரியனைக்கண்டபனிபோல் அவர் முன்னென்
துன்பமெல்லாம்பறந் தேகாதா
ஆபதந்தீர்ப்பவர் அவர்பெருநிதியடி
அடித்தாலும்வைத்தாலும் அவரேகதியடி
பாபபுண்ணியம்பா ராதவள்மதியடி
பாலுக்குந்தனும்பால் வாழ்வதுமதியடி    எத்தனை

4. ஏரியைக்கோபித்துக் கால்கழுவாவிட்டால்
ஏரிக்குண்டோநஷ்டம் ஏதடி
எஜமானைக்கோபித்தால் எனக்கேநஷ்டம்அல்லால்
எசமானுக்குநஷ்டம் ஏதடி
சூரியனைகல்லால்அடிப்பதுபோலத்
துணைவரைபகைத்தல் தகாதடி
துள்ளினமாடே பொதிசுமக்கும்கெட்ட
துஷ்டைகளுக்கென்றுந் தீதடி
நீருள்ளமட்டுக்கும் மீனுக்குக்கொண்டாட்டம்
நீர்வற்றினால்பின்பு நிற்குமோமீன்குற்றம்
பாரியர்க்குப்பத்தா வாலேஆட்டபாட்டம்
பத்தாவுக்குப்பின்பு சோற்றுக்குத்திண்டாட்டம்    எத்தனை

# மாமிநாத்தி முதலானவர்களின் கொடுமையைப்பற்றி ஒரு ஸ்திரீ முறையிடுதல்.

186. இராகம்-கல்யாணி-அடைதாளசாப்பு.

பல்லவி.

ஊருக்கெல்லாம் ஏச்சா-சகியே-இது
ஆருக்கும்ஒருபேச்சா ஊருக்

அநுபல்லவி.

பாருக்குள்ளே என்தன் கணவரும்நானுமே
பாசமாய்விசு வாசமாய்அதி
நேசமாய்சக வாசஞ்செய்வது ஊருக்

சரணங்கள்.

1. பத்தாவுடனேநான் கூடிச்சல்லாபம்
பண்ணினால்மாமியார்க் கென்னடிகோபம்
ஒத்திருந்தால அவட் கேன்மனஸ்தாபம்
ஓகோசகியே இதுவென்னபாபம்
ஓதடி-இது சூதடி-பெரும்
வாதடி-கன-தீதடி-இது ஊருக்

2. நானும்அவரும்பேசில் நாத்திக்கேன்சலுப்பு
நாங்கள்பிணங்கிக்கொண்டால் அவட்கென்னகெலிப்பு
ஆனாலும்எனைக்கண்டால் அவளுக்கேன்வலிப்பு
ஐயையோஊரெங்கும் இதுவேஓமலிப்பு
அன்னமேயடி-சொன்னமேமொழி
புன்னவேதனை-இன்னம்ஏதடி ஊருக்

3. கலியாணஞ்செய்தும் உண்டோசன்னியாசம்
கடனும்வாங்கியும் ஏன்உபவாசம்
பலமாகவேங்கைக் கரையிலேவாசம்
பண்ணியங்களிப்பதற் கென்னபிரயாசம்
பாபமோ இது-சாபமோதெய்வ
கோபமோபரி-தாபமோதினம் ஊருக்

3. தணல்என்பதேஇல்லாமல் தானேஉண்டாகுமோபுகை
சரியாகநீநடந்தால் தலைவற்குண்டாகுமோபகை
குணபூஷணிகட்கு வேண்டுமோவேறுவகை
குப்பையிற்கிடந்தாலும் மாணிக்க பெருந்தொகை மார்

4. கணவனைபகைத்தவள் கரையேறுவதேதடி
கடல்கொதித்தால்விளாவத் தண்ணீர்எங்கேஉதடி
உணர்வாகநீநடந்தால் உண்டோஒருதீதடி
உறுதிநான்சொல்லசொல்ல உனக்கேன்இன்னம்வாதடிமார்

---

## திங்களுக்குப் படிப்பிக்கும்படி ஸ்திரீகள் புருஷர்களை வேண்டுதல்.

188. இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

வித்தையைப்படிப்பியுங்கள்-தயைசெய்து
வித்தையைப்படிப்பியுங்கள் வித்தை

அநுபல்லவி.

உத்தமவான்களே-சத்தியபுமான்களே
உங்கட்குக்கண்ணான பெண்களாமெங்களுக்கு வித்தை

சரணங்கள்.

1. திருத்தமாவேலைகள் எல்லாம்முடிப்போம்-வேலை
தீர்ந்தபின் புஸ்தகங்களைப்படிப்போம்
வருத்தம்நீர்படக்கண்டால்மனம்துடிப்போம்-கீத
வண்ணங்கள்பாடிக் கொண்டுகோல்பிடிப்போம்-பாட
மாட்டோமோ-வீணை
மீட்டோமோ-நயம்
காட்டோமோ சுகம்
ஊட்டோமோ-நல்ல. வித்தை

வரவுசெலவின்கணக்கெழுதிவைப்போம்-பல
வகைவகைஉடுப்புகள் உடுக்கத்தைப்போம்
பரவும்பலதொழில்கள் பண்ணவொப்போம்-நல்ல
பக்ஷணம்கறிகளும்செய்யத்தப்போம்-நாங்கள்

படியோமோ-இருள்
விடியோமோ-மருடு
முடியோமோ-அருள்
பிடியோமோ-நல்ல வித்தை

3. வாணியுந்திரும்ஒரு கோத்திரமா-அவள்
வரபிரசாதம்உமக்கு மாத்திரமா
வீணில்அவட்கெங்கள்மேல் ஆக்கிரமமா-நாங்கள்
மெய்ஞ்ஞானமார்க்கத்துக்க பாத்திரமா-உம்மை

வெல்லோமோ-கல்வி
கல்லோமோ-கலி
செல்லோமோ-புத்தி
இல்லோமோ-நல்ல வித்தை

4. கொஞ்சம்நீர்கோபம்செய்யில் அஞ்சிடுவோம்-எங்கள்
குற்றம்பொறுக்கச்சொல்லிக் கெஞ்சிடுவோம்
வஞ்சமாதாவுமை நம்பிடுவோம்-உம்மேல்
சாகித்தியம்செய்துதினம் கும்பிடுவோம்-நாங்கள்

தாழ்ந்தோமே-துயர்
ஆழ்ந்தோமே-உம்மைச்
சூழ்ந்தோமே-காலில்
வீழ்ந்தோமே-நல்ல வித்தை

5. அடித்தாலும்இகழ்ந்தாலும் கதிநீரே-உம்மை
அன்றிஎங்களுக்கினித் துணையாரே
படித்தால்பிழைத்துப்போவோம் பெரியோரே-இந்தப்
பஞ்சைகள்முகம்பாரும் துரைமாரே-உங்கள்

பதம்பூண்டோம்-அபி
மதம்கொண்டோம்-உங்கள்
இதம்காண்டோம்-அசங்
கதம்வேண்டோம்-நல்ல வித்தை

6. படியாதஆண்கள் உடனேசம்
பண்ணிநீர்சம்மதியீர் லவலேசம்
மடம்உறும்எங்களுடன் சுகவாசம் செய்ய
மட்டும்உமக்கில்லையோ சங்கோசம்-இது
மதிமோசம்வரும்
அதிஹாசம்-மனம்
பதிபாசம்அற
இதிகாசம்-உடன் வித்தை

எ. வித்தையில்லாப்புருஷன் செய்கையையாரும்
விதமல்லவோபடி யாமடவாரும்
உத்தமியையேவிரும்பு வீர்கிரும்-கல்வி
உணராவிட்டால்குணம் எப்படிச்சேரும் இதை
ஓரீரோ--முகம்
பாரீரோ-துயர்
தீரீரோ-தயை
கூரீரோ-நல்ல வித்தை

8. உத்தியோகம் தந்தாலும்ஒரு கைபார்ப்போம்-தினம்
உதவிசெய்துங்கள்தொழில் களைபீர்ப்போம்
பத்தியாய்க்குடித்தனம் தலைஏறபோம்-கல்வி
பாலர்க்குப்போதித்துநல் வழிசேர்ப்போம்-எங்கள்
பதிகிரே-சர்வ
நிதிகிரே-தினம்
கதிகிரே-கண
மதிகிரே-நல்ல வித்தை

9. படித்தால்மிருகம்போல்நாள் கழிப்போமோ-என்னை
பரமபுருஷர்முகத்தில் விழிப்போமோ
அடித்தாலும்முகம்கோணிச் சுழிப்போமோ பல
த்வாகணவராலும் பழிப்போமோ-பல
அணிவேண்டாம் நல்ல
துணிவேண்டோம்-நவ
மணிவேண்டோம்-காமப்
பிணிவேண்டோம்-நல்ல வித்தை

6. இரவின்றி நாங்கிலம்பின் றாம்படுப்போம்-திங்கள்
எழுமுன்னெழுந்துவேலை தனைத்தொடுப்போம்
தருமவதிகள் என்று பெயரெடுப்போம்-நாங்கள்
சாந்தம் வைராக்ய கனை அடுப்போம்-மிகத்
தழையோமோ-கல்வி
நுழையோமோ-உமை
அழையோமோ-ஜீவன்
பிழையோமோ-நல்ல வித்தை

இதுவும் அது

189. இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

கேளும்புமான்களே-கிருபைவைத்
தாளும்சீமான்களே கேளும்

அநுபல்லவி.

நாளும்நீதி இல்லா எங்கள்மேல்வர்மமோ
மாளும்நாய்போல் தள்ளநல்தர்மமோ கேளும்

சரணங்கள்.

1. காலைக்கும்மாலைக்கும் மூலைக்குள்ளெங்களை
ஆலைக்கரும்புபோல் தேய்த்தீர்-பாக
சாலைக்குமன்மத லீலைக்கு நாம் வினை
வேளைக்குமெங்களை மாய்த்தீர்
மூலக்கலவிநாங்கள் வாசித்தால்ஆபத்தோ
மூடப்பெண்கொள்வீர் உமக்குப்பெரும்பித்தோ
ஒலைக்கிரக்கங்கள் உங்கள்பாட்டன்சொத்தோ
உமக்கென்னகாணும் தம்மேல்தலைபத்தோ கேளும்
2. ஆதிபிற்பெண்ணாலே மேதினியோர்கள் உண்
டானவகைமறந்தீரோ-பெண்
சாதிபுருஷனில் பாதியென்றுபடு
நீதியையுந்துறந்தீரோ

பாதிஉடலைப் பறக்கவிடலாமோ
பாவபுண்ணியந்தெரியாமல்கெடலாமோ
நீதியில்லாதெம்மை நிந்தித்திடலாமோ
நிந்தித்துப்பின்எங்களை நேர்தொடலாமோ — கேளும்

3 நாரியரை ஒரு காரியம்இல்லா
நடைப்பிணம்என்றெண்ணினீரே-தேவர்
ஊரில்பெண்கள்கொண்ட சீரினையாகிலும்
உற்றுப்பாரும் ஐயர்மாரே
பாரிதனைநாவில் வைத்தான்பிதாமகன்
பாகம்சிரம்வைத்ததால் சிவன்பாதகன்
மார்பில்வைத்தான்ஹரி பெண்திருடன்குகன்
மங்கைதேடிச்சந்தி வந்தான்கரிமுகன் — கேளும்

4 உங்கட்குதவியாய் எங்களைத்தேவன்
உண்டாக்கியதை அறியீரோ-செல்வ
மங்கைஉடன்கல்வி நங்கைமுதலானோர்
மாதர்என்று குறியீரோ
எங்களை அல்லாமல் நீங்கள்உதித்தீரோ
ஏறிஆகாயத் திருந்துகுதித்தீரோ
அங்கப்பாலுண்ணாமல் தேகம்உதித்தீரோ
அடிமையென்றெங்கள் தலையில்விதித்தீரோ — கேளும்

5 போதகயூரோப்பு மாதர்களைக்கண்டு
பொங்கிப்பொறாமை கொண்டோமே-என்றும்
பேதம்இல்லா இந்தியாதனில்நாங்கள்
பிறந்தென்னலாபம் கண்டோமோ
நாதக்கல்விக்கு நகைஎந்தமூலையே
நாங்கள்விரும்போம் நவரத்னமாலையே
வேதநாயகன்செய் பெண்மதிமாலையே
வேண்டினோம்தாரும் விடோம்உங்கள்காலையே. — கேளு

---

## மூடனைவிவாகஞ்செய்யாதபடி

### ஒரு ஸ்திரீயைத்தடுத்தல்.

190. இராகம்-புன்னாகவராளி-அடதாளசாப்பு.

பல்லவி

மாதேஎன்வார்த்தைதள்ளாதே-அந்த
மாப்பிள்ளைதன்னைக்கொள்ளாதே — மாதே

அநுபல்லவி.

ஆதரவாகஅரவைத் தொடலாமோ
ஆழமறியாமல் காலையிடலாமோ
போதமில்லானுக்கு வாழ்க்கைப்படலாமோ
பொன்னேஒளிர்-மின்னேகெடு
முன்னேமதி-சொன்னேனடி

சரணங்கள்.

1 பொன்னேஅவன் ஆளழகனானுமே
புத்தியில்உலக்கைக் கொழுந்து-வித்தை
தன்னையறியானைக் கொள்வதைப்பார்க்கினுஞ்
சாகலாங்கிணற்றில் விழுந்து
உன்னைக்கைப்பாடு படச்சொல்லிதாக்குவான்
ஊர்மாடுமேய்க்கவே தான்தடிதூக்குவான்
பின்னையும்உன்னைத்தான் பேய்க்கோலமாக்குவான்
பெண்ணேஇரு-கண்ணேஇதை
எண்ணேமொழி-பண்ணேநிகர் — மாதே

2 உத்தமியேஅவன் ஞானமிருக்கின்ற
ஊரையும்பார்த்தறி யானே-தினஞ்
சுத்தநிர்மூடரைக் கூடிக்குடித்துன்
சுகநலத்தைக்குறியானே
நித்தமுந்தாசிகள் வீடுகேட்டோடுவான்
நீங்காமதக்குது நிதம்விளையாடுவான்
சித்தமுனக்குப்பட்டா நாமம்போடுவான்
தேனேமட-மானேநிடம்
நானேசொன் னேனேயடி — மாதே

3 மண்ணுக்குள் ஆணுக் கழகுப்படிப்பும்
மதியுஞ்சுகுணமுந் தானே-வெறுங்
கண்ணுக்கழகும் பணமும்இருந்தென்ன
காரியஞ்சொல்லடி தேனே
புண்ணியவான்ஏழை ஆனாலுங்கொள்ளடி
பொய்யன்பணக்கார னானாலுந்தள்ளடி
வண்ணங்கொள்பெண்ணுக்காண் பஞ்சமோவிள்ளடி
மாதேயிது-தீதேயினி
வாதேசெய்-யாதேயடி- மாதே

## மைத்துனர்கலியாணத்திற்பாடிய பரிகாசக்கீர்த்தனை.

191. இராகம்-பரசு-அடதாளசாப்பு.

பல்லவி.

மைத்துனனாரே-இன்றுமுதல்-மகாராஜர்நீரே.

அநுபல்லவி.

கொத்தார்குழலிஎங்கள் குயிலைக்கொண்டீரே

சரணங்கள்.

1 ஏதும்வஸ்திரங்கட்டி அறியாதும்இடுப்பு
இனிஉமக்குப்பலவகை வகைஉடுப்பு
ஓதும்புகைந்ததுண்டோ முன்உமதடுப்பு
உள்ளதைநான்சொன்னால் உமக்கென்னகடுப்பு மை

2 சொர்ணமயம்எங்கள் சுந்தரிதேகம்
தோற்குமேஉமக்கண்டங் காக்கைஅநேகம்
என்னவிதமாகவோ அடுத்ததுயோகம்
ஈடோஇதற்குதே வேந்திரபோகம் மை

3 உழவுதொழில்செய் துமக்குடம்பெல்லாஞ்சேறு
ஊத்தைகழுவப்பற்று மோஒன்பதாறு
பழங்கூழுண்டஉமக்குப் பாலுடன்சோறு
பயப்படாதிரும்உமக் காயிசுநூறு மை

4 காதவழிகடப் பிரகாலேகாக்ஷி
காடிபல்லக்கினி உமக்குண்டோதாக்ஷி
வதுமற்றஉனக்குப் பலகாணியாக்ஷி
இசைந்ததுஹோஹோஹோ என்னகன்காக்ஷி — மை

5 எருமைநுழையும்உம திருகாதின்தொள்ளை
இனிஉமக்குவச்சிரக் கடுக்கன்கள்கொள்ளை
ஒருவகையும்இல்லாமல் உற்றீரேகள்ளை
வனர்அதிபதிக்கிப்போ துகந்தமாப்பிள்ளை — மை

6 சந்திரசூரியர்மழை பனிகாற்றுவாடை
தாங்கியஉமக்கினி நவரத்னமேடை
உந்தன்அசுத்தங்கொள்ளு மேபலகூடை
உமக்கினிப்புஷ்பஞ்சந்தனம் பன்னீர்வாவட — மை

7 இப்போதுமக்குவாசத் தயிலங்கள்கடலே
இதற்குமுன் எண்ணெய் பட்டறியாதும்முடலே
அப்படியிருக்கவுன் வீண்நடபுடலே
ஆகாசந்தனைமறைப்பதற் குண்டோபடலே — மை

---

# மைத்துனருக்குப்புத்திபோதித்தல்.

---

192. இராகம்-ஹிந்துஸ்தான்காபி-ஆதிதாளம்.

பல்லவி.

மைத்துனரேநாளும்—நான்சொல்லும்
புத்தியைக்கேளும்

அநுபல்லவி.

நித்தமும்உம்மிடம் நேசமேகீரும்
உத்தமிபிவனைஉம் உயிரெனஆளும் — மை

சரணங்கள்.

1 நன்றாயிப்பெண்ணுமக்கு வாய்த்ததேஅதிர்ஷ்டம்
நரிமுகத்தில்முழித் தீர்நல்லசட்டம்
இன்றுமுதல்உமக்கு விடிந்தது கஷ்டம்
இதைமரந்தாற்பயித் தியக்காரப்பட்டம் மைத்

2 சந்திரபிம்பம்இவள் முகமென்றுதேரும்
சர்வகோணமில்உமக் கிணையில்லையாரும்
சந்தேகமிருந்தால்கண் ணாடியைப்பாரும்
தலையைக்கவிழ்ந்துகொண்டு மூலையிற்சேரும் மைத்

3 அணங்கின்அழகுக்குப்பெண் களுங்கொள்வார்ஆசை
அழகிலேநீர் ஆயிரம்அமாவாசை
இணங்கியேவாழ்வதில் என்னபிரயாசை
இவளைநீர்மணஞ்செய்ய என்செய்தீர்பூசை மைத்

4 சுந்தரிஇவளும் நீரும்ஒருதேகம்
சுகதுக்கம்இருவர்க்கு மேசமபாகம்
வந்தமறுமாதரைச் சேர்வதுதுரோகம்
மலருமணமும்போல வாழ்வதுஸ்நேகம் மைத்

5 தெரியாமற்செய்தபிழை பொறுப்பதுநேயம்
இட்டிப்பெண்சாதிகளை அடிப்பதநியாயம்
பிரியமாய்ப்பேசித் திருத்துவதேஉபாயம்
பெண்ணென்றால்பேயுமே செய்யும்சகாயம் மைத்

6 நயமில்லாவார்த்தைக ளாற்பகைமூளும்
நன்மையினாற்குறை வில்லைஎந்நாளும்
தயையுடனென்னைப்போற் பாரியைஆளும்
சந்தேகமிருந்தாலுந் தமக்கையைக்கேளும் மைத்

7 இவளைப்பிரிந்தார்இவள் தாய்தந்தைமாரே
இனிமேல்தாய்தந்தை சகலமும்நீரே
அவனியில்இவள்உம தாவிக்குநேரே
அன்பில்லாவிடில்எடுப் பீர்கெட்டபேரே மைத்

8 நற்புத்திஇவள்சொன்னால் அதைச்செவிகொள்ளும்
நமக்கொருநிகரில்லை யென்றநீர்தள்ளும்
துற்புத்திதான்சொன்னாற் கேளாமல்தள்ளும்
தோஷத்தைநீக்கிநற் குணங்களைஅள்ளும் மைத்

9 தந்தைதாய்குருசொன்ன படிநேர்நில்லும்
சாஸ்திரம்உணர்ந்தறி யாமையைக்கொள்ளும்
அந்தமின்னூலையும் படித்திடச்சொல்லும்
அடிக்கடிசொல்லிடிற் கரையுமேகல்லும் மைத்

10 உன்னரியகடவுள் அடிக்கன்புகூறும்
உத்தமவான்களை யேஎன்றுஞ்சேரும்
இன்னந்தெரியாவிட்டால் மாயூரம்வாரும்
இசைவேதநாயகன்செய் நீதிநூல்பாரும் மைத்

முற்றிற்று.

---

## பிழைதிருத்த

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 20 | 31 | வடுவாந் | வடிவாந் |
| 21 | 29 | விதனரகைப் | விதனநரகைப் |
| 59 | 17 | அருள்செய்யுன் | அருள்செய்யீன் |
| 83 | 16 | வித்ததனே | வித்தகனே |
| 98 | 29 | தரணிமதந்தக் | தரணிமீதந்தக் |
| 100 | 6 | காலனெனும் | கானலெனும் |
| 125 | 6 | இதபர | இதர |
| 138 | 24 | எடுதத | உடுத்த |
| 150 | 6 | கால் | சாலில் |
| 151 | 6 | அண்டைவில் | அண்டையில் |
| 158 | 20 | கிஜீரணியாய் | நீஜீரணியாய் |
| 167 | 23 | நகைகன் | நகைகள் |
| 168 | 20 | நவவனி | நவமணி |
| 169 | 11 | குணத்தையே | குணத்தையே |
| 171 | 3 | பால்வடியுய் | பால்வடியும் |
| 172 | 31 | சேட்டாள் | கேட்பாள் |
| 176 | 13 | இற்றைக்குச் | இன்றைக்குச் |
| ,, | 25 | சென்வம் | செல்வம் |
| ,, | ,, | அபாயப் | அபாயம் |
| 179 | 24 | கவியாணம் | கலியாணம் |

